





பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு.
லிரில். அலையெறியும் தளதள பச்சை. அதன்
நயமோ குளுகுளு எலுமிச்சை...புதுக்
குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**
புத்துணர்வு சோப்  **மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**



இந்துஸ்தான் லீவரின் தரமிக்க தயாரிப்பு.

# Kalki Shopping Page

# கல்விப் பணிக்கு ஒரு வள்ளுவர்

## டி.எஸ்.கே

சர்வ தேசக் குழந்தைகள் ஆண்டினையொட்டி, பாரத அரசின் சமூக நல அமைச்சகம், இரு பெரும் பணிகளுக்கான தேசிய விருதுகளை அறிவித்தது. ஒன்று: அமைப்பு ரீதியிலான தன்னலமற்ற குழந்தைகள் முன்னேற்றப் பணி; மற்றொன்று: தனிப்பட்ட நபரின் சிறப்பான பணி. முதல் பிரிவுக்கு, அகில பாரதத்திலிருந்தும் அறுபத்தியேழு அமைப்புகள், பல்வேறு மாநில அரசுகளால் பரிந்துரைக்கப்பட்டன. விருது நிறுவப்பட்ட ஆண்டிலேயே லட்ச ரூபாய் ரொக்கப் பரிசைப் பெற்று, தமிழ் நாட்டின் பெருமையை உயர்த்தியிருக்கிறது. 'வள்ளுவர் கல்விக் கழகம்!

தஞ்சாவூர் நகருக்குச் சற்றுத் தொலைவிலுள்ள சித்திரக்குடி என்னும் சிற்றூர்தான், வள்ளுவர் கல்விக் கழகத்தின் தலைமையகம். சுற்று வட்டாரத்தில் உள்ள கூனமங்கலம், வெள்ளாம்பெரம்பூர், அல்லூர், திருவாலம் பொழில் ஆகிய கிராமங்களிலும், இந்தக் கழகத்தின் சமூகப் பணியும் கல்விப் பணியும் இணைந்து தொடர்ந்து நடைபெறுகின்றன.

''நாற்பது வருஷங்களுக்கு முன்னாலே, சித்திரக்குடி பள்ளிக்கூடத்தில் சேரிச் சிறுவர்களையும் சேர்த்துக் கொண்டபோது எக்கச்சக்கமான எதிர்ப்பு! நானும் பரம ஏழை. எனவே, அவர்களுடைய சிரமங்களை நன்றாக உணர முடிந்தது. சமுதாயத்தின் அடித்தளத்தில் உள்ள சிறுவர் — சிறுமியர்களுக்குக் கல்வி அளிப்பது என் முதல் லட்சியமாக இருந்தது. பின்னர் ஹாஸ்டல், கைத்தொழில் கற்பித்தல் முதலியவை சேர்ந்து கொண்டன. ஏதோ, என்னால் முடிந்த எளிய தொண்டினைச் செய்து வருகிறேன். மாநில அரசும், மத்திய அரசும் எங்கள் கழகத்தின் பணிகளைப் பாராட்டி, ஓரளவு, உதவித் தொகை அளித்து வருகின்றன'' என்கிறார், வள்ளுவர் கல்விக் கழகத்தின் நிறுவனத் தலைவர் திரு ஆர். எஸ். சீனிவாச அய்யர்.

வெள்ளாம்பெரம்பூர் மாணவியர் விடுதியில் நுழைகிறோம். பள்ளிக்கூடச் சுவர்களில் பொன் மொழிகள் பொறிக்கப்படாமல் இருக்குமா? ஆனால், இங்கே சற்று வித்தியாசம்! 'அதிகாலையில் எழு. கை கால் முகம் கழுவு. கடவுளை வணங்கு. திலகமிட்டுப் பள்ளிக்கு வா. வாழ்க பாரதம்....'

இந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு நு. தங்கவேலு, சீரிய கல்விப் பணிக்காக மாநில அரசின் பாராட்டுச் சான்றிதழ் பெற்றவர். மாணவர்கள் இவைரி கடமைகளின்படி காலை ஐந்து மணிக்கே துயிலெழுந்து இரவு ஒன்பது மணிக்குத்தான் படுக்கச் செல்ல வேண்டும். 'மாணவர்கள் அலுத்துக்கொண்டதே இல்லை' என்கிறார், திரு தங்கவேலு.

திரு எஸ். அரியபெரும்பு என்ற ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த ஆசிரியர். 'போர்டிங் மாணவனாக 1942 முதல் 47 வரை சித்திரக்குடியில் படித்தார். பின்னர் ஆசிரியர் பயிற்சி பெற்று, திரு சீனிவாச அய்யரிடமே வேலை செய்ய வந்து விட்டார். 'ஹரிஜன் என்றால் ஹரிக்கு உறவினன் என்று பொருள். எங்கள் தலைவரை ஹரிஜன் சீனிவாச அய்யர் என்று சொல்வார்கள். என்னைப் பொறுத்த வரையில் அவர் ஹரிஜன் அன்று, ஹரியே! — ஸ்ரீநிவாசன் இல்லையா?.... எனக்கு உணவும், உறையுளும், கல்வியும் வாழ்வும் அளித்த அவரை எப்படி மறக்க முடியும்'

இப்படி சீனிவாசனை மறக்காதவர்கள் ஆயிரக்கணக்கில் உண்டு. இவர் கல்விக் கழகத்தின் ஆதரவில் நடைபெறும் இளங் குற்றவாளிகள் பள்ளியில் பயின்று, இன்று நல்ல முறையில் வாழும் நூற்றுக் கணக்கானோர் இவரை எப்படி மறக்க முடியும்? தஞ்சையில் உள்ள சங்கரர் அச்சகத்திலும், சங்கரர் உடை தயாரிப்புப் பகுதியிலும் பணி புரியும் அனாதைப் பெண்கள் இவரை எப்படிமறக்க முடியும்?

வெள்ளாம் பெரம்பூரில் நடைபெறும் ஹரிஜன உதவி பெறும் நடுநிலைப் பள்ளியில் மட்டும் எண்ணூறு மாணவ மாணவியர் படிக்கிறார்கள். சமூக நலத்துறையின் உதவி பெறும் விடுதியில் 125 மாணவர்கள் தங்கியிருக்கிறார்கள். ஆறும் வகுப்பில் படிக்கும் நாகுல் ஹமீதும் மூன்றும் வகுப்பில் படிக்



⌘ கல்லணையில் திரு. சீனிவாச அய்யருக்குப் பாராட்டு. பொன்னுடை போர்த்துபவர், தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் திரு. கங்கப்பா.

கும் நாகூர் கனியும் விடுதியில் தங்கியிருக்கிறார்கள். அவர்களுடைய பெற்றோர்கள் அன்றாடக் கூலிகளாம். பொருளாதாரத்தில் பின்தங்கிய அவர்கள் குடும்பத்துக்கு, வள்ளுவர் கல்விக் கழகத்தின் மாணவர் விடுதி ஒரு வரப் பிரசாதம்.

**ப**ள்ளி வயதடைந்த சிறார்களுக்கு மட்டும் தான் இந்தக் கழகத்தின் சேவை கிடைக்கும் என்பதில்லை. வேலைக்குச் செல்லும் தாய்மார்களின் ஆறு மாதம் முதல் மூன்று வயது வரையிலான குழந்தைகளின் பகல் கால பராமரிப்பையும் இக்கழகம் ஏற்கிறது. மத்திய சமூக நல வாரியத்தின் மானியம் பெறும் 'குழந்தைகள் காப்பகத்'தில் இருபத்தைந்து குழந்தைகளைக் கண்காணிக்க இரண்டு ஆயாக்கள் இருக்கிறார்கள். நெல்லை அறுவடைக்காலத்தில் காப்பகம் நிரம்பி வழியுமாம். அறுவடைக்குச் செல்லும் பெண்கள், தத்தம் குழந்தைகளை இங்கே விட்டுச் செல்கிறார்கள்.

அனாதைச் சிறுவர்களின் மேம்பாட்டுக்காகவும் இக்கழகம் சேவை செய்கிறது. வெள்ளாம் பெரம்பூரில் விவேகானந்தா அநாதை இல்லமும், சித்திரக்குடியில் வள்ளுவர் அனாதை இல்லமும் செம்மையாகச் செயல்படுகின்றன. அனாதை இல்லத்துக்கு விவேகானந்தர் பெயரைப் போடுவானேன் என்றதற்கு, 'ஆன்ம ரீதியாக நாம் எல்லோரும் ஒன்றே. அநாதை என்று ஒருவர் எப்படி இருக்க முடியும்?' என்று கேட்டவர் அவர்தானே!'' என்கிறார் கல்விக் கழகத் தலைவர்.

திரு சீனிவாச அய்யரின் சொந்த ஊர் நடுக் காவேரி. அங்கே ஒரு வடமொழிப்பள்ளி அமைக்கப் போகிறாராம். பரிசுத் தொகையின் பாதிப் பங்குடன் இன்னும் பணம் சேர்த்து இவர்களால் நடத்தப் பெறும் பள்ளிகளில் எட்டாம் வகுப்பு வரை பயின்று, மேலே கல்வியைத் தொடர முடியாமல் அவதிப்படும் மாணவர்கள் கல்லூரி வரை படிப்பதற்கு வசதி அளிக்கப் பயன்படுத்தப் போகிறார்.

இரண்டே ஆசிரியர்களுடன் அந்தக் காலத்தில் ஒரு சிறு பள்ளிக்கூடத்தைத் தொடங்கிய திரு சீனிவாச அய்யர், இன்று ஒரு மாபெரும் ஸ்தாபனமாகவே திகழ்கிறார். சின்னஞ் சிறு செடி வளர்ந்து, கப்பும் கிளையுமாய்ப் படர்ந்திருக்கிறது. அதன் நிழலில் நல்வாழ்வு பெறும் சிறார்கள் ஆயிரம், ஆயிரம். 'வளர்க இந்த ஆக்கப் பணி' என்று நாமும்தான் வாழ்த்துவோமே!

★



✖ பாலவாடியில்

✖ ஆசிரியர்களும் மாணவர்களும்

---

இரண்டு சிறு பையன்கள் மாடர்ன் ஆர்ட் எக்ஸிபிஷனில் பார்த்துக் கொண்டு நின்றிருந்தார்கள். ஒரு பையன் சொன்னான்: ''நாம் இங்கிருந்து உடனே ஓடி விடுவோம்''...

மற்றொரு பையன்: ஏன்...?

முதல்வன்: இல்லையென்றால் நாம் தாம் இப்படி கிறுக்கி இருக்கிறோம் என்று பின்னால் வருபவர்கள் திட்டுவார்கள்... எஸ். ராமன்

● ● ●

அப்பா: (படுத்திருக்கும் சிறுவனிடம்) உன் அண்ணன் என்னடா உன்காதிலே குசுகுசுன்னு சொல்றான்?

சிறுவன்: 'தூங்கற மாதிரி பாசாங்கு பண்ணு அப்பத்தான் அப்பா தன் அறுவைக் கதையை நிறுத்திட்டுப் போவார். பிறகு உனக்கு நான் ஜாலியாக் கதை சொல்லறே'னுங்கறான்!

கே. ஆர். எம்.


மேற்கு வங்காள இ.காங்கிரஸ் இளைஞர் போராட்டம்
உங்க பையனை அடக்கி வைக்கக் கூடாதா?
ஜோதி பாசு
சென்ன ரெட்டி
ஒவ்வொருத்தருக்கா சொல்லிக் கிட்டு இருக்க முடியாது.. இதுக்கெல்லாம் காரணம் ஸி.ஐ.ஏ அல்லது ஜனதா.. அல்லது ஆர்.எஸ்.எஸ்
காரணங்கள்


தமிழக இ.காங்கிரஸ்


கொள்ளையடிக்க சௌகர்யமா இருட்டு வேறே.. போலீஸ்! போலீஸ்!

# செய்திகள் வாசிப்பது 'செம்பியன்'



## தேசப் பிரஷ்டமானவர்!

**வை**த்தியலிங்கம் சரியான அதிர்ச்சி வைத்தியம் செய்தார் — மொரார்ஜி சரண் இருவருக்கும்.

இருவரும் பதவியில் இருந்த காலத்தில் ஒருவர் மீது ஒருவர் பழி சுமத்தி, ஏசி, குழாயடிச் சண்டை போட்டுக் கொண்டார்கள். பிறகு இருவரது குற்றச்சாட்டுகளிலும் ஏதாவது ஆதாரம் இருக்கிறதா என்று பார்க்க வைத்தியலிங்கத்தை நியமித்தார்கள்.

இதற்கிடையில் இந்திரா பதவிக்கு வந்தாகி விட்டது. வைத்தியலிங்கம் அறிக்கை வெளியாயிற்று. மொரார்ஜியின் மகன் சரணின் மனைவி இருவருமே இசகு பிசகாக நடந்து கொண்டிருக்கிறார்கள் என்று அறிக்கை கூறுகிறது.

சிலர் அறிக்கையை அபத்தம் என்கிறார்கள். சிலர் ஆஹா ஓஹோ என்று அதனைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடுகிறார்கள். இருவிதப் போக்குமே தவறு. வைத்தியலிங்கம் விசாரணை, ஒரு விசாரணைக் கமிஷன் அல்ல. விசாரணைக் கமிஷன் வைக்க வேண்டிய அளவுக்கு அநீதி ஏதாவது நடந்திருக்கிறதா என்று ஆராய்வதற்கு நியமிக்கப்பட்டார் வைத்தியலிங்கம். அவ்வளவே. அவர் பல குற்றச்சாட்டுக்களைத் தள்ளிவிட்டுச் சிலவற்றுக்கு விசாரணைக் கமிஷன் நியமிக்கலாம் என்று கூறியிருக்கிறார். பிறகு என்ன, நியமித்து உண்டு, இல்லை என்று பார்த்துவிட வேண்டியதுதானே?

இந்திரா அவ்வாறு செய்வாரா? சந்தேகம்தான். தம்மீதும் தம் மகன் மீதும் நியமிக்கப்பட்ட கமிஷன்களைக் கலைப்பதற்கும், கமிஷன்கள் ஏற்கனவே அளித்த தீர்ப்பை மூடி மறைக்கவும், கோர்ட்டில் தாக்கலான கேஸ்களை அரசு வாபஸ் பெறவும் தீவிர நடவடிக்கை எடுத்து வரும் அவர், இப்போது மொரார்ஜி, சரண் உறவினர்கள் செய்த அநீதி குறித்து ஆராயக் கமிஷன் நியமிப்பாரா? உள்ளூற அவர் அதற்கு ஆசைப்பட்டாலும் சூழ்நிலை சரியில்லையே! ஏற்கெனவே அச்சாகியுள்ள ஷா கமிஷன் அறிக்கையை வேண்டுவோருக்கு விற்பதற்குக்கூட இப்போது தடை விதிக்கப்பட்டுள்ளது. அதாவது தலை முதல்கால்வரை இந்திராவும் சஞ்சயும் புனிதப்படுத்தப்பட்டு வருகிறார்கள்! கருணாநிதிக்கும் சேர்த்துத்தான் அண்மையில் திருப்பதி சென்று வேண்டுதல் செய்து வந்தாரோ என்னவோ? சர்க்காரியா அறிக்கையையும் மூட்டை கட்டிப் பரண் மேல் ஏற்றி விடுவார் இந்திரா.

இதற்கெல்லாம் பரிகாரம், 'அம்புட்ஸ்மான்' என வழங்கப்படும் நிரந்தர நீதி விசாரணை அமைப்பு ஏற்படுத்துவதுதான். சுப்ரீம் கோர்ட்டின் அதிகாரங்களுடன் கூடி, பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ளோர் மீது சுமத்தப்படும் புகார்களை விசாரிக்க இத்தகைய அமைப்பு, 'லோக் பால்' என்ற பெயரில் இந்தியாவில் உருவாகலாம் என்பதற்கு மசோதா தயாராகி ரொம்ப நாளாகத் தூங்குகிறது. என்று நீதிக்கு அஞ்சியவர்கள் பதவிக்கு வருவார்களோ, என்றைக்கு அந்த மசோதா நாடாளுமன்றத்தில் தாக்கலாகுமோ, நீதி தேவனுக்கு ஒருவேளை தெரிந்திருக்கலாம்! அவன் எங்கிருக்கிறான்? கொஞ்சம் தேடிப் பார்த்துச் சொல்லுங்களேன்! அவன் இந்தத் தேசத்திலிருந்து பிரஷ்டமாகி ரொம்பக் காலமாகி விட்டதென்று கேள்வி!

● ● ●

## அவருடைய வாதம்

**அ.** இ. அ. தி. மு. க.வின் கண்டனப் பேரணியின்போது மண்டை உடைபட்டு மருத்துவ மனை சென்று திரும்பிய என் அப்பாவி நண்பன் ஒருவனைப் பற்றி இந்தப்

1980 ஏப்ரல் 6
சித்தார்த்தி பங்குனி 24
மலர்: 38 இதழ்: 36



# கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

பகுதியில் எழுதியிருந்தேன். அதைப் படித்துவிட்டு ஜெனரல் ஆஸ்பத்திரி டீன் எனக்கு ஃபோன் செய்து ஜெனரல் ஆஸ்பத்திரி பற்றிய செய்திகள் தவறாக இருப்பதாகவும் மறு தரப்பைச் சரியாக விசாரியாமல் நான் எழுதிவிட்டதாகவும் வருத்தப்பட்டுக் கொண்டார். 'தடியடிப் பிரயோகத்தில் காயம் அடைந்தவர்கள் மிகச் சிறப்பான விதத்தில் ஜெனரல் ஆஸ்பத்திரியில் கவனித்துக் கொள்ளப்பட்டார்கள் என்பது அவர் வாதம். ''நானே ஒரு நிருபரை அனுப்புகிறேன். அவரிடம் உங்கள் கருத்தைக் கூறுங்கள். பிரசுரித்துவிடலாம்'' என்றேன். அது இவ்விதழில் வேறு ஒரு பக்கத்தில் பிரசுரமாகியுள்ளது.

அவர் ஃபோனை வைத்து இரு நிமிஷங்களுக்குள் சொல்லி வைத்தாற்போல் எனது நண்பன் வந்தான். ''ரொம்ப தாங்க்ஸ்'' என்றான். ''எதற்கு?'' என்றேன். ''நான் பயந்துபோய் என் பெயரை வெளியிட அனுமதி தராவிட்டாலும் நீங்கள் துணிந்து உண்மைகளை எழுதினீர்களே அதற்கு. உண்மைகளை யாராவது கூறத்தானே வேண்டும்'' என்றான்.

''அது சரி, நான் ஒன்றும் தவறாக எழுதிவிடவில்லையே? நடந்தது நடந்தபடிதானே எழுதியிருக்கிறேன்? சரியாக வாசித்துப் பார்த்தாயல்லவா?'' என்று கேட்டேன்.

''ஒரு வார்த்தைகூடப் பிசகில்லை ஸார்!'' என்றான் நண்பன்.

• • •

## எட்டாப் பழம்

சில நாளைக்கு முன் வந்த தமிழகச் செய்தி ஒன்று: சஸ்திர சிகிச்சையின்போது டாக்டர் ஃபோர்ஸெப்ஸ் கருவியை வயிற்றுக்குள் வைத்துத் தைத்துவிட்டார். கொஞ்ச நாட்கள் கழித்து வயிற்று வலி தாங்காமல் வேறு ஒரு டாக்டரிடம் போய் எக்ஸ்ரே எடுத்தபோது உண்மை புலனாயிற்று!

ஆந்திராவிலிருந்து சமீபத்தில் இன்னொரு செய்தி: ஒரு குழந்தைக்குக் கான்ஸர் இருந்த கண்ணை நீக்குவதற்குப் பதிலாக நன்றாக இருந்த கண்ணை எடுத்துவிட்டார்கள்! பிறகு கான்ஸர் உள்ள கண்ணையும் எடுத்தே ஆகவேண்டுமாதலால் அந்தக் குழந்தைக்கு எதிர்காலம் இருள் மயமானதுதான்!

இதுபோன்ற தவறுகள் மேனாடுகளிலும் நடக்கின்றன. கோடியில் ஒன்று என்று கூறத்தக்க விதத்தில் அண்மையில் அமெரிக்காவில் ஒரு நோயாளிக்குச் செய்ய வேண்டிய ஆபரேஷனை வேறு ஒரு நோயாளிக்குச் செய்துவிட்டார்கள்!

மேனாடுகளிலும் இப்படி அபூர்வமாக நடக்கிறதே என்பதால் நாம் இங்கு நடக்கும் தவறுகளை மன்னிக்கவோ மறக்கவோ முடியாது; கூடாது. அலட்சியத்தினாலேயே இத்தனை தவறுகள் நடப்பது வெளியே தெரிய வருகிறது. டாக்டர்களுடைய அறியாமையினால் நடக்கும் எத்தனையோ பல தவறுகள் வெளியே தெரியவரவே செய்யாது! அதற்கு வாய்ப்பே இல்லை.

சில ஆண்டுகளுக்கு முன் இங்கிருந்து மேல் படிப்புக்கு பிரிட்டன் சென்ற ஒரு டாக்டர், கல்லீரலை நோயாளியின் இடப்புறத்தில் அமுக்கிப் பார்த்துத் தேடப் போக, அவரை உடனே ஊருக்குத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். இவரைப் போன்ற டாக்டர்கள் எத்தனை பேர்களை நமது மருத்துவகலாசாலைகள் உருவாக்கித் தள்ளுகின்றனவோ!

மருத்துவத் துறை மட்டுமென்ன, வேறு எத்தனையோ பல துறைகளிலும் திறமையின்மையைத்தான் அடிக்கடி சந்திக்கிறோம். இந்நிலைமையில் அபிவிருத்தி காண, தேசம் துரிதமாக முன்னேற ஒரே வழி, தகுதிக்கும் ஆற்றலுக்கும் மட்டுமே சகல துறைகளிலும் ஒவ்வொரு கட்டத்திலும் முதலிடம் அளிப்பது என்ற கொள்கையை அனுசரிப்பதுதான்.

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

சர்க்கரை 'க்யூ', சினிமாவுக்கு 'க்யூ', டாக்டரிடம் 'க்யூ', பஸ், ரயில் 'க்யூ' என்று எல்லா இடங்களிலும் 'க்யூ'வைப் பார்த்துச் சலித்துப் போன அவன் தற்கொலை செய்து கொள்ள எண்ணி மலையுச்சிக்குப் போனான். அங்கு மூன்று பேர் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் எதற்காக அங்கு நிற்கிறார்கள் என்று விசாரித்த பொழுது கிடைத்த பதில்.

''தற்கொலை செய்து கொள்ள வேண்டுமானால் க்யூவில் நில்.''

-பம்பாய் சந்திரசேகர்



எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விட்டு என்ன பிரயோஜனம்?

⊖ ⊖ ⊖

### தலைகீழ் பாடம்

"ஒபினியன்" என்று ஓர் ஆங்கில வாரப் பத்திரிகை வெளி வருகிறது. விலை 5 பைசா தான்! சுதந்திரச் சங்கு ஞாபகம் இருக்கிறதா? அது போல். ஆண்டுச் சந்தா இரண்டே ரூபாய்! ஏ. டி. கோர்வாலா ஆசிரியராக இருந்து நடத்தும் இந்தப் பத்திரிகைக்கு அச்சம் என்றால் என்ன என்றே தெரியாது! — நெருக்கடி நிலைப் பிரகடன காலத்தில் கூட! (விலாசம் 40-சி, ரிட்ஜ் ரோடு, பம்பாய்-400006).

சமீபத்திய ஒபினியன் இதழில் ஒரு சம்பவம் விவரிக்கப்பட்டிருக்கிறது. அமைச்சர் கிருஷ்ண மேனன் செய்ய நினைத்த ஒரு காரியம் தவறு என அதிகாரி ஒருவர் எடுத்துக் காட்டி அவரிடமே வாதம் புரிந்து கொண்டிருந்தார். கிருஷ்ண மேனனுக்கு மூக்குக்கு மேல் கோபம். "நீ என் சகாவா? என் எதிரியா?" என்று கேட்டார். அதிகாரி திகைப்படைந்து திறந்த வாய் மூடாதிருந்தார். கிருஷ்ண மேனன் மேஜையை அறைந்து, "உன் பதில் என்ன?" என்று கேட்டு இரைந்தார். அதிகாரி பிரமிப்பிலிருந்து விடுபட்டு எழுந்து நின்று ஃபைலை மூடினார். "மிஸ்டர் கிருஷ்ண மேனன்! நான் உங்கள் சார்பிலும் பேசவில்லை; உங்களுக்கு எதிராகவும் பேசவில்லை. பாரத தேசத்தின் சார்பாகப் பேசுகிறேன்" என்றார், கம்பீரமாக.

அன்று கிருஷ்ண மேனன் மாதிரி ஒருவர் தான் இருந்தார்; அந்த அதிகாரி போலப் பலர் இருந்தனர். இன்றோ? கிருஷ்ண மேனன் மாதிரி பல அமைச்சர்கள் இருக்கிறார்கள்; அந்த அதிகாரி போல ஒருவருமே இல்லை! நிர்வாக முறை இத்தேசத்தில் எப்படித் தலைகீழாக மாறிவிட்டது!

⊖ ⊖ ⊖

### ஈஸாப் கதை

கீழ்மட்டத்தில் ஆற்று நீரைக் குடிக்க வந்த ஆட்டினிடம் மேல் மட்டத்தில் நீர் அருந்த வந்த ஓநாய், "நீ ஆற்றைக் கலக்குகிறாய்" என்று குற்றம் சாட்டிப் பாய்ந்ததாம். ஆடு குளோஸ்!

டெல்லி மெட்ரோபாலிடன் கவுன்ஸில் மீது ஏதேதோ புகார்களை லெஃப்டினண்ட் கவர்னர் எழுப்ப, அதைக் காரணம் காட்டி இந்திரா அரசு கவுன்ஸில் மீது பாய, கவுன்ஸில் குளோஸ்!

ஒன்பது மாநில சட்ட சபைகளைக் கலைத்த போது, "முன்பு ஜனதா செய்ததைத்தானே நாங்களும் செய்கிறோம்?" என்று ஓர் அபத்த வாதம் புரிந்தார்கள். இப்போது அத்தகைய சாக்கு கூட இல்லை!

கலைக்கப்பட்ட டெல்லி மெட்ரபாலிடன் கவுன்ஸிலுக்கு மக்கள் வழங்கிய பதவிக் காலம் இன்னும் இரண்டாண்டுகள் பாக்கியுள்ளன. மக்களை மதிக்காத இந்திராவின் சர்வாதிகாரப் போக்குக்கு இன்னமும் எடுத்துக்காட்டு தேவையெனில் இந்த நடவடிக்கை மற்றொரு சான்றாக நிற்கிறது.

இந்திராவே ஆட்சிப் பொறுப்பில் உள்ள மத்திய அரசு உட்பட, இந்திரா காங்கிரஸ் ஆட்சியில் உள்ள மாநில அரசுகள் உள்ளடங்க, பல அரசுகளிலும் குறைகள் இருக்கத்தான் செய்யும். இந்திரா துதி பாடாத அரசுகளை மட்டும் ஏதேதோ குறைகளைக் கற்பித்துக் கலைத்து விடுவதென்றால் அது கூட்டாட்சியோ, ஜனநாயகமோ, அரசியல் சாசன ரீதியான ஆட்சியோ எதுவும் இல்லை. வடிகட்டின எதேச்சாதிகாரம்தான்.

இப்படியெல்லாம் நடக்கும் என்று தெரிந்துதானே அன்றைக்கே ஈஸாப் கதை எழுதியிருக்கிறார்!

---

கோடை விடுமுறையின் போது வாசகர்களுக்கு நல்ல பொழுதுபோக்காக அமையும் பொருட்டு "**கோடை விடுமுறை மலர்**" ஒன்று வெளியிடப் போகிறோம்.

கல்கி பத்திரிகையின் அளவில் கோடை விடுமுறை மலர் **320** பக்கங்களுடன், வழுவழுப்பான வார்னிஷ் அட்டையுடன் வெளிவரும்.

பிரபல எழுத்தாளர்கள் பலரின் சிறுகதைகள், ஒரு குறுநாவல், கட்டுரைகள், கவிதைகள், புகைப் படங்கள், சினிமாச் செய்திகள், பாப்பா மலர், ஹாஸ்ய வெடிகள் என்று இந்த மலர் முழுவதும் படிக்கப் படிக்கத் தெவிட்டாத வண்ணம் இருக்கும். பொதுவாக இது ஒரு குட்டி தீபாவளி மலர்!

**கோடை விடுமுறை மலரின் விலை ரூ. 5/-**






# கோத்ரெஜ்
## அளிக்கும் புதிய
# எவிக்ஸ்
## ப்ளூ டிடர்ஜெண்ட்
## வில்லை



அழுக்கை அறவே அகற்றுகிறது

பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது

எவிக்ஸ். பொலிவுக்கும் வெண்மைக்கும் புதிய வழி.
எவிக்ஸ் உதவியினால் அழுக்கு நீங்குகிறது. எவிக்ஸ் சக்தி வாய்ந்த வெண்பொருள் ஒன்றைக் கொண்டுள்ளதால் உங்கள் துணிகள் முன்பை விட அதிக வெண்மையையும் அதிக பளபளப்பையும் பெறுகின்றன. நீலம் போன்ற சாதனத்தை இனி நீங்கள் உபயோகிக்க வேண்டியதே இல்லை.

எவிக்ஸ் விசேஷமான முறையில் கலவை செய்யப்பட்டது.
எவிக்ஸ் ஈரக்கசிவற்றது. கூழ்போல ஆவதில்லை, பசையற்றது. எவிக்ஸ் ஒரே துண்டாக நீடித்திருப்பதால் அதை இறுதி வரை உபயோகிக்க முடியும். நீங்கள் அதிகமான துணிகளைத் துவைக்கலாம். கூடுதலான சேமிப்பைப் பெறலாம். ஒரு டிடர்ஜெண்ட் வில்லையில் நீங்கள் நாடும் எல்லா வித நன்மைகளும் கொண்டுள்ளது எவிக்ஸ். இன்றே வாங்குங்கள்.
எவிக்ஸ் அழுக்கை அகற்றுகிறது. பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.

ஈரக்கசிவற்ற
# எவிக்ஸ்
ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை
**நீடித்து உழைக்கிறது**

CHAITRA-G-108-TAM



# விதியை வெல்வோம்!

## ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள்

உலகத்தில் பலருக்கு ஒரு சந்தேகம் ஏற்படுகிறது. அதாவது நாம் இறந்த பிறகு என்ன ஆகும் என்பதே. இதைக் கேட்கிறான் நசிகேதன். சிறு வயதிலேயே ஞானத்துக்கு ஆசைப்படுகிறவன் அவன். எமன், பொன் முதலான சகல போகங்களைத் தருவதாக அவனுக்கு ஆசை காட்டுகிறான். ஆனால் அச்சிறுவன் தன் கொள்கையிலேயே உறுதியாக இருக்கிறான். ஞானமே மோக்ஷத்திற்கு ஸாதனம். அதுவே பிறப்புச் சக்கரத்தைத் தடுக்க முடியும்.

மனிதனாகப் பிறந்திருக்கும் ஒருவன் வேண்டுமென்றாலும், வேண்டாமென்றாலும் பிறவி எடுத்துத்தான் தீர வேண்டும். பகவானுடைய சட்டத்திற்குட்பட்டுத்தான் நாம் இருக்க முடியும். நாம் செய்யும் கர்மாக்களுக்கு (காரியங்களுக்கு) ஏற்றபடியான பலன்களை அவனே வாரி வழங்கும் தயாளனாய் விளங்குகிறான். நமக்கெல்லாம் ஒரு பிரமை அல்லது மயக்கம் ஏற்படுகிறது. இந்த உடல்தான் நிலையானது என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் உண்மையில் அவ்வாறு இல்லை. மருந்துகள் எவ்வளவுதான் உட்கொண்டாலும் என்றாவது ஒரு நாள் நமது உயிர் பிரியத்தான் போகிறது. ஆகவே நல்ல கர்மாக்களை நாம் இருக்கும் போதே செய்து கொள்ள வேண்டும். அவைதாம் நாம் மறு பிறவி எடுக்கும்பொழுது மங்களகரமான ஒரு பிறப்பைக்கொடுக்க வல்லது.

சாஸ்திரத்தையே நாம் பிரமாணம்! என்று எடுத்துக்கொள்ள வேண்டும். உலகத்தில் பெரும்பாலும் நாம் துச்கமே அனுபவிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, உண்மையாக இருக்கக் கூடிய ஒரே பொருள் 'ஆத்மா' தான் என்பதை உணர வேண்டும். அதுவே ஞானத்தின் எழுச்சி. எப்பொழுதும் துன்பம் அனுபவிக்கிறோமே என்ற காரணத்துக்காக நாம் தற்கொலை முயற்சியில் ஈடுபடக் கூடாது. இவ்வாறு செய்வது நமக்குப் பாவத்தையே அதிகமாக்கும். தேள் கடிக்குப் பயந்து பாம்பின் வாயில் விழுவது போலல்லவா அது ஆகிவிடும்?

பகவான் காரணமில்லாமல் ஒருவனை ஒரு மாதிரியும், மற்றொருவனை ஒரு மாதிரியும் படைக்க மாட்டான். அவனிடம் பாரபட்சமாக நடப்பது போன்ற குணங்கள் கிடையாது. நாம் முற்பிறவியில் செய்த காரியங்களுக்கு ஏற்றவாறு இப்பிறவியைப் பெறுகிறோமே தவிர பகவானைக் குறை கூறிப் பிரயோசனமில்லை. எப்படி ஒரு நீதிபதி நாம் தவறு செய்தால் தண்டனை விதிக்கிறாரோ அப்படியே இவ்விஷயத்திலும் நடக்கிறது.

சிலர் இள வயதிலேயே சக்தியற்றவர்களாக இருப்பதையும், மற்றும் சிலர் எண்பது வயதிலேயும் ஓடியாடி உழைப்பதையும் நாம் காண்கிறோம். கர்மங்களினால்தான் இவ்வித சுக துக்கங்களை நாம் அடைகிறோம். ஆனால் இந்த விதியை இப்பிறவியில் நடக்கும் எல்லாவற்றுக்கும் பொறுப்பெனக் கூற முடியாது. நம் முயற்சிகளால் கர்ம பலன்களில் மாறுதல்கள் செய்ய முடியும். ஒருவனுக்கு ஒரு ஜோதிடர் ஜாதகம் பார்த்து முப்பத்தைந்து வயதுதான் அவன் இருக்க முடியும் என்று சொன்னாலும், அவன் ம்ருத்யுஞ்ச ஹோமம், ஆராதனை முதலியவை செய்து, சத்காரியங்கள் செய்து மேலும் பல வருடங்கள் உயிர் வாழலாம். அதே போல் மருத்துவர், ஒருவனுக்கு எண்பது வயது என்று சொன்னாலும் அவனது கெட்ட நடவடிக்கைகளால் அதற்கு முன்னேயே இறந்துவிடலாம். இதனால், டாக்டரையோ, ஜோதிடரையோ குற்றம் சாட்ட முடியாது. ஆகவே நம்முடைய செயல்களால் விதியில் மாறுதல் இயற்ற முடியும்.

ஆனால் சில சமயங்களில் ஒருவன் நன்கு படித்தும், தேர்வுகளில் மதிப்பெண் நன்கு பெற முடியாததன் காரணம் தெய்வத்தின் செயலேயாகும். முயற்சிகள் செய்து வினையைக் கூடிய மட்டும் மாற்றக் கூடிய பலன் மனிதர்களுக்கே ஏற்பட்ட ஓர் அனுகூலம். மிருகங்களுக்கு இச்சிறப்புக் கிடையாது.

ஆகவே நாம் தப்பு வழியினின்றும் விடுபட்டு, நல்வழியிலே சென்று அமைதியான மனத்தைப் பெறலாம். கர்மா உண்டு. அதற்கும் ஆதாரமான ஜீவன் உண்டு. அதுதான் ஸம்ஸார சாகரம் (பிறப்பு இறப்பென்னும்) என்னும் கடலில் உழல்கிறது. அது கடைத்தேற ஸத்யமாயுள்ள அந்த ஆத்மாவை உணர்ந்து ஞானம் பெறுவதே நமது எண்ணமாக இருக்க வேண்டும்.

# 8

மூன்று நாட்கள் ஓடின ஓட்டம் தெரியவில்லை. வெள்ளிக்கிழமை காலை விமானத்தில் சந்திரனின் தாயார் வந்துவிட்டார். பட்டுப் புடவையும், மூக்கில் மூக்குத்தியுமாய் வந்து இறங்கினவளைப் பார்த்ததும் அம்மா ஞாபகம் வர, சிலநிமிஷங்களுக்கு ஹோம் சிக்காகிப் போன வித்யா மெதுவாய்த் தன்னைச் சமாளித்துக் கொண்டாள். காப்பி, டிபன் சாப்பிட்டானதும் இண்டர் நாஷனல் டெர்மினலிருந்து டி. டபிள்யூ. ஏ. டர்மினலுக்குக் கூட்டிப் போய் ஸியாட்டில் விமானத்தில் அவரை ஏற்றிவிட்டபிறகு நியூயார்க்கை அலசத் தொடங்கினார்கள்.

ஏற்கனவே ஒருமுறை நியூயார்க்குக்கு வந்திருக்கிறார்கள் என்றாலும் அப்போது ஒரு நாள்தான். ரொம்ப சாவகாசம் இல்லை. காரில் ஹாயிவில்லிலிருந்து கிளம்பி ஷிகாகோ வாஷிங்டன், நியூயார்க், நயாகரா என்று பத்து நாட்களுக்குள் ஒரு பெரிய வட்டமே அடிக்க வேண்டியிருந்தது. காலில் வெந்நீர் கொட்டிக் கொண்ட அவசரம்.

இந்த முறை அப்படி இல்லை. முழுசாய் மூன்று நாட்கள். ஸ்டாச்சு ஆஃப் லிபர்ட்டியில் ஏறினார்கள். குட்டிக் கப்பலில் மான்ஹாட்டனைச் சுற்றி வந்தார்கள். ரேடியோ ஸிடி



மியூஸிக் ஹாலில் 'ஷோ' பார்த்தார்கள். பிராட்வே நாடகத்தை ரசித்தார்கள்; ராத்திரி விடிய விடிய சைனா டவுனிலும், க்ரீன்விச் வில்லேஜிலும் சுற்றினார்கள்.

ஞாயிறு ராத்திரி லேட் ப்ளைட்டில் ஹூஸ்டனுக்குத் திரும்பினபோது வித்யாவின் உடம்பு ஓய்ந்து போயிருந்தது.

வீட்டு வாசல் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழையும்போது ஜென்னி ஞாபகம் நெஞ்சில் அறைந்தது.

அட, எப்படி மூன்று நாட்களாய் அவள் நினைவே இல்லாமல் இருந்தேன்?

டோராவுக்குப் போன் பண்ணி எப்படி இருக்கிறாள் என்று கேட்கலாமா?

மணி என்ன?

பதினொன்னரையா?

டூ லேட்—

இப்போது வேண்டாம், காலையில் பார்த்துக்கொள்ளலாம்.

புடவையை மாற்றிக் கொண்டு படுக்கையில் விழுந்த வித்யா மீண்டும் கண்ணை விழிக்கும்போது கடிகாரம் எட்டேகால் என்றது.

இத்தனை நாழியா தூங்கி விட்டேன்?

அத்தனை அசதியா?

பல் தேய்த்து, ஹவுஸ் கோட்டை மாட்டிக் கொண்டு சமையல் அறைக்கு வந்தாள்.

ஏழு மணிக்கு அலாரம் வைத்து எழுந்து காப்பி மட்டும் சாப்பிட்டுவிட்டு ராஜு போய் விட்டிருந்தான்.

அந்த அலாரம் அடித்ததுகூடக் கேட்காதபடி அப்படியா தூங்கினேன்?

காப்பியைக் கலந்து கையில் எடுத்துக் கொண்டு ஜன்னல் திரையை விலக்கிப் பக்கத்து வீட்டைப் பார்த்தாள்.

யாரையும் கண்ணில் காணவில்லை.

போன் ரிஸீவரை எடுத்து நம்பர்களை அமுக்கினாள். மணி அடித்துக்கொண்டே இருந்தது.

நோ ரெஸ்பான்ஸ்!

வொய்?

டோரா ஹாஸ்பிடலுக்குப் போயிருப்பாளோ?

வேறு யாருக்காவது போன் செய்து விவரம் கேட்கலாமா?

வம்புக்கு அலைகிறேன் என்று தப்பாய் எடுத்துக் கொண்டால்?

வேண்டாம். லெட் மீ வெயிட். பதினொரு மணிக்கு டோரா வந்துவிடுவாள்.

மூன்று நாள் அழுக்கை தோய்த்து, குளித்த பின் அருகிலிருந்த ஸூப்பர் மார்க்கெட்டுக்குப் போய், பால், தயிர், சிப்ஸ், காய்கறி, இன்னும் தேவையான சாமான்களை வாங்கி வந்தவள், திரும்ப டோரா கிடைப்பாளா என்று முயற்சி செய்தாள்.

ம்ஹூம். நோ லக்.

ஜென்னிக்கு உடம்பு அதிகமாய் இருக்கிறதா? அதுதான் ஹாஸ்பிடலில் இத்தனை நாழிகை இருக்கிறாளா?

என்ன பண்ணுவது என்று புரியாமல் மதியச் சாப்பாட்டைத் தட்டில் வைத்துக் கொண்டு டி.வி.யில் சினிமா பார்த்தாள்.

மூன்று மணி வரை ஈ காக்கையிடமிருந்து தகவல் இல்லை.

மூன்றே கால் அளவில் தோட்டத்திற்கு வித்யா போய் நின்று கொண்டாள்.

அவள் எதிர்பார்ப்பு வீணாகவில்லை.

தூரத்தில் ஸ்டீவும், ராபினும் வருவது புரிய, கையை ஆட்டி அவர்களை அழைத்தாள்.

''ஹாய், வென் டிட் யூ கம்?''

''நேற்று ராத்திரி ஸ்டீவ்... ஆமாம் வீட்டில் அம்மா இல்லையா? போன் அடித்துக் கொண்டே இருக்கிறதே!''

வித்யாவின் வீட்டுக்குள் நுழைந்த பிறகு ஸ்டீவ், ''அம்மா ஹாஸ்பிடலில் இருக்கிறாள்'' என்றான்.

சாப்பிடுவதற்குத் தினிகளை மேஜை மேல் வித்யா எடுத்து வைத்தாள்.

''ஜென்னி எப்படி இருக்கிறாள்?''

''ரொம்ப மோசமாம், வித்யா — நேற்று அம்மா அவளுக்கு ரத்தம் கொடுத்தாள், தெரியுமா?''

''தெரியாதே.... நினைவு திரும்பி விட்டதா?''—



''இன்னும் இல்லே...''

அந்தப் பையன்களிடம் வேறு என்ன கேட்பது என்று வித்யாவுக்குப் புரியவில்லே.

அந்த நாட்டில் பதினறு வயசுக்கு உட்பட்டவர்களே வார்டில் அனுமதிக்க மாட்டார்கள் என்பது அவளுக்குத் தெரியும். நோயாளியைச் சின்னக் குழந்தைகள் பார்க்க வேண்டுமானல், கொஞ்சம் உடம்பு தேறிய பிறகு வரவேற்பு அறையில்தான் சந்திப்பது சாத்தியம்.

''டோரா எங்கே?''

''அவள் பள்ளியிலிருந்து ஜாக்குலின் வீட்டுக்குப் போய்விட்டாள். அப்புறமாய் அப்பா போய் அழைத்துக் கொள்வார்.''—இத்தனை நேரம் சும்மா இருந்த ராபின் பேசினன்.

''ஜென்னி சரியாகிவிடுவாளா வித்யா? நாலு நாளாய் எங்களுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லே தெரியுமா? தினம் அவளுக்காகப் பிரார்த்தனை செய்கிறோம். அப்பா, அம்மாவிடம் ஜென்னிக்கு எப்படி இருக்கிறது என்று நச்சரிக்கக் கஷ்டமாயிருக்கிறது''—ராபின் உதட்டைக் கடித்துக் கொண்டு அழுதுவிடாமல் இருக்கப் பிரயத்தனப் பட்டுக் கொண்டு பேசுவது புரிய வித்யா கையை நீட்டி அவன் முடியைக் கோதி விட்டாள்.

''ஷி வில் பீ ஆல் ரைட் ஸன், ராபின். ப்ளீஸ் டோன்ட் ஃபீல் ஸோ பாட்''—

சில நிமிஷங்களில் ''தாங்க்ஸ் வித்யா— நாங்கள் போகிறோம். சாவி எங்களிடம் இருக்கிறது. போய் ஹோம் ஒர்க் பண்ண வேண்டும்'' என்று பையன்கள் கிளம்பினர்கள்.

''அம்மா அல்லது அப்பா வந்தால் எனக்கு போன் பண்ணச் சொல்கிறாயா?''

பிள்ளேகள் தலே ஆட்டிவிட்டு வீட்டுக்குப் போனர்கள்.

ஏழு மணிக்கு ராஜு வேலேயிலிருந்து திரும்பியபோதும் டோராவிடமிருந்து போன் இல்லே.

என்னயிற்று?

---

டாக்டர் பத்மா சுப்பிரமணியம் சொன்னது இது:

''பண்டித ஜவாஹர்லால் நேருவை நான் சிறு வயதில் சந்தித்தபோது என் நாட்டியத்தைப் பெரிதும் பாராட்டினர் அவர். நான் அவரிடம், 'உங்களுக்குப் பிடித்த நுண்கலே எது?' என்று கேட்டேன். அவர், ''உனக்கு இப்போது புரியாது, பின்னல்தான் தெரியும். ஆமாம், வாழ்வது தான் சிறந்த கலே'' என்றர்! —ராமுசாமி



''நேற்று ஜென்னிக்கு ப்ளட் ட்ரான்ஸ்ஃபீஷன் கொடுத்திருக்கா; டோராதான் ப்ளட் கொடுத்தாளாம். ஸ்டீவ் சொன்னன்.

ஹாஸ்பிடல்லே இல்லாத ரத்தமா? ஏன் இவ கொடுக்கணும்? ஜென்னி எப்படி இருக்கிறளோ தெரியவில்லேயே! ஹாஸ்பிடலுக்கு வேணு போய்ப் பார்க்கலாமா?

ராஜு மறுத்து விட்டான்.

''ஹாஸ்பிடல்லே விஸிட்டிங் அவர்ஸ் முடிஞ்சிருக்கும். இனிமே நாம போக முடியாது. லெட் அஸ் வெயிட் அண்ட் ஸீ.''

சாப்பிட்டார்கள்.

பாத்திரங்களே அலம்பிக் கொண்டிருக்கையில் போன் ஒலித்தது.

மார்க்.

அப்போதுதான் டோராவுடன் உள்ளே நுழைந்தானும். வித்யா கவலேப்பட்டுக் கொண்டு நாலு தரம் போன் பண்ணியதைக் குழந்தைகள் சொன்னதால் உடனே போன் செய்தானும்.

''ஜென்னி எப்படி இருக்கிறள் மார்க்?''

''புதுப் பிரச்னே ஒன்று கிளம்பியிருக்கிறது ராஜு.''

''நாங்கள் இப்போது அங்கு வந்தால் அது உங்களுக்குத் தொந்தரவாய் இருக்குமா?''—

''ஓ— நோ. ப்ளீஸ் கம்.''

பகல் பூராவும் டோரா வீட்டில் இல்லே. இனிமேல்தான் சமைக்க வேண்டும் என்பது ஞாபகத்துக்கு வர பீட்ஸா ஹவுஸை போனில் அழைத்து நாலு ஸ்டேக் பிட்ஸாக்களே மார்க் வீட்டுக்குக் கொண்டு தரவும், பில்லேத் தனக்கு அனுப்பவும் — சொன்ன பிறகு அவர்கள் கிளம்பினர்கள்.

ஸ்டீவும், ராபின்னும் 'டென்'னில் இருந்தார்கள்.

''டோரா எங்கே?''—

''இனிமேல்தான் போய் அழைத்து வர வேண்டும்.''

''சாப்பிட்டுவிட்டீர்களா?''

''இன்னும் இல்லே''—

''உங்களுக்காக ஸ்டேக் பீட்ஸா ஆர்டர் கொடுத்திருக்கிறேன். பத்து நிமிஷத்தில் வந்துவிடும். ஒன்றும் சமைக்க வேண்டாம்.''

''தாங்க்ஸ் ஏ லாட்... தட்ஸ் ஸோ குட் திங்கிங்...''

''வேர் இஸ் டோரா?''—

''பெட் ரூமில் இருக்கிறள்.''—

தனக்கும் ராஜுவுக்கும் விஸ்கி கொண்டு வந்த மார்க் 'வாட் வில் யு ஹாவ்?' என்றன் வித்யாவிடம்.

''ஒன்றும் வேண்டாம். நான் போய் டோராவைப் பார்க்கலாமா?''

''ஷ்யூர், கோ ரைட் அஹெட்.''

விரலே மடித்துக் கொண்டு வித்யா கதவில் தட்டியதும் 'ப்ளீஸ் கம் இன்' என்று டோரா அழைத்தாள்.

டோரா படுத்திருந்தாள். வெளியே அணிந்து போன உடைகளே இன்னும் மாற்றவில்லே.

மூன்று நாட்களில் டோரா மெலிந்திருப்பது புரிந்தது. பலஹீனமா? வருத்தமா?

டோராவுக்கு மூக்கு சிவந்து, கண்கள் கலங்கியிருப்பது கிட்டத்தில் போய்ப் பார்த்தபோது புரிந்தது.

அழுகிறாளா?

டோரா அழுகிறாளா?

இப்போது இவள் தனிமையைக் கலைப்பது தப்போ?

''நான் வேண்டுமானால் போய்விட்டு அப்புறமாய் வரட்டுமா, டோரா?''

''ஓ—நோ. ப்ளீஸ் கம் இன்.''

கர்ச்சீப்பைப் பிரித்துக் கண்களுக்கடியில் வைத்துக் கொண்ட டோரா பேசினாள்.

''உட்கார் வித்யா.''—

வித்யா உட்காரவில்லை.

''உன் தனிமையை நான் கெடுக்க விரும்பவில்லை டோரா... நான் போய்விட்டு வரு....''

கையை நீட்டி டோரா தடுத்தாள்.

''போகாதே வித்யா.... ப்ளீஸ் உட்காரேன்.''—

வித்யா உட்கார்ந்தாள்.

ஓரிரு நிமிடங்கள் டோரா எதுவும் பேசவில்லை. சற்றுப் பொறுத்துப் பேசினபோது குரல் கம்மி இருந்தது.

''குழந்தைகளுக்கு எதிரில் என் துக்கத்தைக் காட்டிக் கொள்ளக் கூடாது என்று நானும் எத்தனையோ பிரயத்தனப்படுகிறேன். முடியவில்லையே வித்யா... அங்கு ஜென்னி ஜடமாய் .... முக்கால் பிணமாய்க் கிடப்பதை நினைத்து விட்டால் மனசு ஆடிப் போகிறது வித்யா...; நான் என்ன பண்ணுவேன்? எப்படித் தைரியமாய் இருப்பேன்?''—

மூக்கைச் சிந்திக் கொண்டு டோரா அழுதபோது சட்டென்று டோரா மறைந்து ஒரு க்ஷணம் தன் அம்மா தோன்றின மாதிரி வித்யாவுக்குத் தோன்றியது.

''ஜென்னி எப்படி இருக்கிறாள் டோரா?''

''தலை காயம் கொஞ்சம் பரவாயில்லை. ஆனால் கிட்னி இரண்டும் சுத்தமாய் வேலை செய்வதை நிறுத்திவிட்டன வித்யா.''

''என்னது?''—

''எஸ் — போத் ஹர் கிட்னிஸ் ஆர் நாட் ஃபங்ஷனிங்....''

''எப்போதிலிருந்து?''

''நேற்று காலையிலிருந்து....''

''மேற்கொண்டு என்ன பண்ணப் போகிறீர்கள்? அதற்காகத்தான் நீ ரத்தம் கொடுத்தாயா? வேறு எங்குமே ஜென்னியின் ரத்த வகை கிடைக்கவில்லையா என்ன?''

மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்து போனாள் டோரா. அப்புறம் நிதானமாய்ப் பேசினாள்.

''உடனடியாக வேறு கிட்னி ஒன்றாவது பொருத்தினால்தான் ஜென்னி பிழைப்பாளாம், வித்யா....''

கிட்னி ட்ரான்ஸ்ப்ளான்டேஷன்?

இது என்ன புது வேதனை?

''எ.... என்ன செய்யப் போகிறீர்கள் டோரா?''—

''நானும் மார்க்கும் நேற்று முழுதும் யோசித்து ஒரு முடிவுக்கு வந்துவிட்டதால் இரண்டு பேரையுமே டாக்டர்கள் நேற்று மாலையே பரிசோதித்தார்கள். அதிர்ஷ்டவசமாய் என் ரத்தம், ஜென்னியுடையதோடு பொருந்தி யிருக்கிறது. இன்றும் நான் முழுக்கத் திசுக்களை ஒப்பிட்டார்கள். கடவுள்

புண்ணியத்தில் அதுவும் ஒத்துக் கொண்டு விட்டது...''

என்ன சொல்கிறாள் இந்த டோரா?

ப்ளட் க்ரூப், ஆர். எச். ஃபாக்டர், டிஷ்யூ ஃபங்க்ஷனிங் இந்த டெஸ்டுக்கெல்லாம் இப்போது என்ன முடை?

வித்யா விழித்தாள்.

''புரியவில்லையா வித்யா? நாளைக்கு நான் ஹாஸ்பிடலில் சேரப் போகிறேன். என் கிட்னி ஒன்றை எடுத்து விரைவில் ஜென்னிக்குப் பொருத்த டாக்டர்கள் சம்மதித்து விட்டார்கள்.''

என்னது?

ஷாக் அடித்த மாதிரி வித்யா அதிர்ந்து போனாள்.

முப்பத்தி ஏழு வயசு டோரா, மூன்று குழந்தைகளுக்கு அம்மாவான டோரா, தன் தத்துப் பெண்ணுக்குத் தன் சிறு நீரகங்களில் ஒன்றைத் தர முன்வந்திருக்கிறாளா?

அதுவும் அந்தப் பெண் பிழைப்பாளா, பிழைத்தாலும் தலைக் காயம் ஆறுமா, அவள் எதிர்காலத்தில் சாதாரணப் பெண்ணாய் இருப்பாளா என்று எதுவும் புரியாத நிலையிலா?

''ஜென்னிக்கு நினைவு திரும்பி அவள் பேச, கேட்க, சாப்பிடத் தொடங்கின பின் இந்த ஆபரேஷனை வைத்துக் கொள்ளக் கூடாதா டோரா?''—

''முடியாது வித்யா. ஜென்னி இப்போது உயிர் பிழைக்க வேண்டுமானால் இன்னும் நாற்பத்தி எட்டு மணி நேரங்களில் என் கிட்னி அவளுக்குப் பொருத்தப்பட வேண்டும்.''

''ஜென்னி உயிர் பிழைத்து எழுந்த பிறகு ஒருவேளை மூளை சரியாக இல்லாமல் போனால்?''—

வேதனையுடன் சிரித்தாள் டோரா.

''அவள் பைத்தியமாக இருந்தாலும், பேச முடியாத ஊமையாய் இருந்தாலும் செவிடாய், உடலில் ஊனம் உள்ளவளாய் இருந்தாலும், அவள் உயிரோடு இருப்பாளே வித்யா, இதுதானே முக்கியமான விஷயம்?... விலவ் ஜென்னி வித்யா... வி ஹால் டு டு திஸ் ஃபார் ஹர் ஸேக், டோண்ட் யூ அண்டர்ஸ்டாண்ட்?''

மேலே பேச முடியாமல் உணர்ச்சி வசப்பட்டுப் போன டோரா சின்னதாய் விசும்ப முற்பட்டாள்.

வித்யாவால் அவள் முன் உட்கார முடியவில்லை.

எழுந்து டோராவின் காலில் விழ வேண்டும் போல இருந்தது.

'உன்னைப் பற்றி நான் எத்தனை கேவலமாய்ப் பேசிவேன் டோரா, என்னை மன்னித்துவிடு' என்று திரும்பத் திரும்பச்சொல்ல வேணும் போல இருந்தது.

வெள்ளைத் தோலானாலும், கறுப்புத் தோலானாலும், அமெரிக்கரானாலும் இந்தியரானாலும் அம்மா என்கிற வார்த்தைக்கு ஒரே அர்த்தம்தான் என்பதை நான் உணர்ந்துவிட்டேன் என்று அரற்ற வேண்டும் போல இருந்தது.

மனசில் நினைத்த எதையுமே வெளியில் சொல்லத் தெரியாமல்,

''கடவுள் இருக்கிறார், தைரியமாய் இரு டோரா'' என்று மட்டும் சொன்ன வித்யா டோராவின் கைகளைப் பற்றிக் கொண்டு அவள் வேதனையைப் புரிந்து கொண்டுவிட்ட நினைவில் தனக்குள் பொங்கிய அழுகையை அடக்க முடியாமல் தானும் அவளோடு சேர்ந்து விசும்பத் தொடங்கினாள். (முற்றும்)



## வைரக் கிரீடம்

தெலுங்கிலிருந்து தமிழுக்கு மொழிமாற்றம் செய்யப்பட்டிருக்கும் வண்ணப்படம்.

ஜமீன்தாரி முறை சட்டப்படி ஒழிக்கப்பட்டும் கூட, படாடோபங்கள் அதை விட்டுவிடத் தயாராயில்லை. ஒரு ஜமீன்தாரின் பரம்பரைக் குடும்பச்சொத்தான விலை மதிக்க முடியாத ஒரு வைரக் கிரீடம் திரைக் கதையின் மகுடமாக விளங்குகிறது.

இப்படத்தில் ஒரு விசேஷம்: பழம் பெரும் ஆந்திர நடிகரான ஏ. நாகேஸ்வரராவுடன் இப்பொழுது முன்னணியிலுள்ள ஆந்திர நடிகர் கிருஷ்ணா முதன் முதலில் இணைந்து நடித்திருக்கிறார். நாகேஸ்வர ராவுக்கு இரட்டை வேஷம்.

துப்பாக்கிச் சண்டை, டிஷ்யூம் டிஷ்யூம் சண்டை, காதல் காட்சிகள், கண்ணீர், தாய்ப்பாசம் என்று ஒரு திரைப்படத்துக்குத் தேவையான அத்தனை மசாலாக்களும் இப்படத்தில் இருக்கின்றன.

ஜரீனாவஹாப் நாகேஸ்வரராவின் ஜோடியாக நடிக்கிறார். பல தமிழ்ப் படங்களில் நடித்துத் தற்சமயம் டைரக்டர் நிலைக்கு உயர்ந்திருக்கும் விஜய நிர்மலா கிருஷ்ணாவுக்கு ஜோடியாகத் தோன்றுகிறார். இப் படத்தின் டைரக்டரும் விஜய நிர்மலாதான்.

ஒளிப்பதிவுக் கலைஞர் கோபிகிருஷ்ணா படத்தின் வண்ண ஒளிப்பதிவை அதியற்புதமாக எடுத்து அளித்திருக்கிறார். கவிஞர் வாலி பாடல்களையும் உரையாடல்களையும் எழுதியிருக்கிறார்.

'வைரக் கிரீடம்' பளபளவென்று கண்கவர் வனப்புடன் ஜொலிக்கிறது. —காந்தன்



**நா**கமுத்து நிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

''ஏய்யா... நான் ஒன்னு கேட்பேன்... தருவியா ஐயா!

''என்ன வேலாயி?''

''எனக்கு நீ ஒரு சத்தியம் செய்து தரணும். இனிமே நீ திருடக் கூடாது. நீ என்னை விட்டுப் பிரிஞ்சு போயிடக் கூடாதுங்கற பயத்துல இந்தச் சத்தியத்தைக் கேட்கலய்யா. கால் காசு சம்பாதிச்சாலும் எம்புருசன் உழைச்சு வேலை செய்யறவர்ன்னு பெருமையாச் சொல்லிக்க ஆசைப்படறேன். கோடி கோடியாச் சம்பாதிச்சாலும் அந்தத் திருட்டுப் பொழைப்பு வேண்டாய்யா...''

வேலாயி நாகமுத்துவைத் திருமணம் செய்து கொண்டபோது மிகவும் மகிழ்ச்சியோடு இருந்தாள். அந்த மகிழ்ச்சி நீடிக்கவில்லை. தன் கணவன் ஒரு குடிகாரன் என்றும் திருடன் என்றும் மூன்று மாதத்தில் மெல்ல மெல்ல அவள் புரிந்து கொண்டாள். திருட்டுத் தொழிலை விட்டுவிடும்படி தன் கணவனிடம் எவ்வளவோ கெஞ்சினாள். வேலாயி. நாகமுத்து அதையெல்லாம் லட்சியம் செய்யவில்லை. ஒரு நாள் ஒரு பெண்ணின் கழுத்திலிருந்து நகையைத் திருடிவிட்டு அவளைக் கொலை செய்ய முயற்சி செய்ததாக அவனைப் பிடித்துக் கொண்டு போனார்கள். ஆறு மாதம் சிறையிலிருந்து விட்டுத் திரும்பி வந்தவனிடம்தான் இந்த வாக்குறுதியைக் கேட்டாள்.

''வேலாயி... இந்த அன்னத்து மேலே சத்தியமாச் சொல்றேன். இனிமே நான் திருட மாட்டேன்.''

வேலாயி கண்களில் நீர் பொங்க மகிழ்ச்சியோடு அவனைப் பார்த்தாள்.

தன் கணவன் திருந்திவிட்டதை எண்ணி மகிழ்ச்சியோடு இருந்தாள் வேலாயி.

நாகமுத்து கூலி வேலைக்குப் போய்க்கொண்டிருந்தான்.

''இதப்பாருய்யா... கொஞ்ச நாளைக்குக் கூலி வேலைக்குப் போ. அப்புறம் இன்ஜினியர் ஐயா கிட்டச் சொல்லி ஒரு வேலை வாங்கித் தர்றேன்'' என்றாள் வேலாயி.

நாகமுத்து தலையாட்டினான்.

உடம்பு வலி என்று மூன்று நாட்களாக வேலைக்குப் போகாமல் வீட்டில் இருந்தான்.

''இந்தாய்யா.... இன்னிக்கு இஞ்ஜினியர் ஐயாவோட குழந்தைக்குப் பொறந்த நாள். பெரிய மனுஷங்க ரொம்பப் பேர் வருவாங்க. இன்னைக்கு நான் வர்றதுக்கு ரொம்ப நேரமாகும். நீ பாட்டுக்கு வயித்தக் காயப்போட்டுக்காதே. வயிறு நிறையச் சாப்புட்டுப் படு.... என்ன?''

''சரி வேலாயி!'' — நாகமுத்து தலையாட்டினான்.

**த**ம் மனைவியின் தலையை ஆதரவோடு தடவிக் கொடுத்தார் இன்ஜினியர்.

''ப்ளீஸ்.... அழாதே சௌமி. லதாவுக்கு ஒன்னும் ஆயிடாது. போலீஸ் ஸ்டேஷனுக்குக் கம்ப்ளைண்ட் கொடுத்திருக்கேன். வேலைக்காரர்களை நாலா பக்கமும் லதாவைத் தேட அனுப்பியிருக்கேன்...''

கணவனின் கையைப் பற்றிக் கொண்டாள் சௌம்யா. அவள் கைகள் நடுங்கின.

''அவள் கழுத்து நிறைய நகை போட்டிருந்தாங்க. அதனால்தான் எனக்குப் பயமாயிருக்கு.''

''டோன்ட் பி ஸில்லி... அவளுக்கு ஒன்னும் ஆகாது. கவலைப்படாதே. நான் மறு

## எரியும் ரயில்!
## THE BURNING TRAIN

இந்த இந்தி சினிமாவில் தர்மேந்திரா - ஹேமமாலினி உட்படப் பிரபல பதினைந்து நட்சத்திரங்கள், வழக்கமான இருபத்தியேழு நட்சத்திரங்கள், இருபத்தியாறு துணை நட்சத்திரங்கள், புதுமுகம் பாயல் ஆக மொத்தம் நடிக - நடிகையர் பட்டியலில் மொத்தம் அறுபத்தி ஒன்பதுபேர்! இந்தியாவில் இத்துணை நடிகர்கள் ஒட்டு மொத்தமாக நடித்தது வேறெந்தப் படத்திலும் இல்லை! விசேஷ தந்திரக்காட்சிகளை அமைத்திருக்கிறவர்கள் அமெரிக்காவிலிருந்து வந்த நிபுணர்கள்! ஓடும் ரயிலில் வெடிகுண்டுகள் வெடிக்கப் படுவது, இதன் விளைவாக ரயிலின் ஒரு பகுதி கொழுந்து விட்டெரிவது, அதனையொட்டி நிகழும் சுவாரஸ்யமான பயங்கரச் சம்பவங்கள் எல்லாவற்றையும் படம் சுவையாகக் கூறுகிறது. ஹெலிகாப்டரிலிருந்து தரைக்குத் தாவுதல், ரயில் கூரையில் நடக்கும் பயங்கரப் போராட்டங்கள் எல்லாமே நமக்குப் பிரமிப்பூட்டும். 70 எம் எம்மில் ஸ்டீரியோபோனிக் சவுண்ட் சிஸ்டத்தில் தயாரிக்கப்பட்டுள்ளது பி. ஆர். சோப்ராவின் இப்படம்.

டி. எம். ஆர்.



---

படியும் போய் லதாவைத் தேடிப்பார்த்துட்டு வர்றேன். அமைதியா இரு'' சௌம்யாவின் கைகளைத் தட்டி ஆறுதல் சொல்லிவிட்டு வெளியே வந்தார்.

காரில் அமர்ந்து அதை ஒரு வேகத்துடன் கிளப்பினார் இன்ஜினியர்.

தட்டிக் கதவைத் திறந்தான் நாகமுத்து.

வேலாயி சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

''வேலாயி....'' என்று கூப்பிட்டான் நாகமுத்து.

அவளிடமிருந்து பதில் இல்லை.

''வேலாயி... உனக்குப் புடிச்ச கலர்லே ரெண்டு புடவை... இத பார் மூணு பவுன்லே தங்கச் செயின்... இது உன் கழுத்துக்கு ரொம்ப நல்லா இருக்கும் வேலாயி. கல்யாணமான புதுசுல இதெல்லாம் என்னால வாங்கிக் குடுக்க முடியல்லே. இப்பத்தான் அதுக்குச் சந்தர்ப்பம் வந்திருக்கு.... இந்தா....''

ஒரு நீளமான பையிலிருந்து பலகார வகைகளை ஒவ்வொன்றாக எடுத்து வைத்தான்.

''உனக்குக் கோழிக் கறிப் பிரியாணின்னு ரொம்பப் புடிக்குமே.... வாங்கிட்டு வந்திருக்கேன். இந்தா...வேலாயி சாப்புடு...''

ஒரு பொட்டலத்தை அவள் முன்னே பிரித்து வைத்தான்.

''என்ன வேலாயி... பேசாம இருக்கே?''

அவளைக் கூர்ந்து பார்த்தான். திடுக்கிட்டான்.

''வேலாயி.... ஏன் அழுறே?''

''எங்க இன்ஜினியர் ஐயாவோட குழந்தை காணலேய்யா...''

''கொழந்தை கெடைச்சுடும். நீ சாப்புடு வேலாயி'' ஒரு கை எடுத்து அவள் வாயருகே கொண்டு போனான் நாகமுத்து.

''வேண்டாய்யா!'' என்று அவன் கையைத் தடுத்தாள் வேலாயி.

''ஆ!'' என்று கையை உதறினான் நாகமுத்து.

''என்னய்யா... கையில என்ன?''

''அது....அது ஒண்ணுமில்லே....''

''எங்கே... கையைக் காட்டு?''

சட்டென்று வலது கையைப் பிடித்துப் பார்த்தாள் வேலாயி. வலது புறங்கையில் நான்கைந்து பற்கள் பதிந்து இரத்தம் கன்றியிருந்தது.

''இது எப்படிய்யா ஆச்சு?''

''அது ஒண்ணுமில்லே வேலாயி....''

''இல்லேய்யா.... நீ ஏதோ பொய் சொல்றே. இதுக்கும் என் முன்னால் பரப்பி வெச்சிருக்கியே இந்தப் பொருள்களுக்கும் ஏதோ தொடர்பிருக்கு. இதெல்லாம் வாங்க அவ்வளவு பணம் உனக்கு ஏதய்யா? உண்மையைச் சொல்லு. இல்லேன்னு... உன் கண்ணுக்கு முன்னாலேயே என் சேலைத் தலைப்பாலே என் வாழ்க்கையை முடிச்சுக்குவேன்''

—ஒரு வேகத்தோடு எழுந்தாள் வேலாயி.

சட்டென்று அவள் கையைப் பிடித்துக் கொண்டான் நாகமுத்து.

''உண்மையைச் சொல்றேன் வேலாயி... உன்னைப் பார்க்க இன்ஜினியர் பங்களாவுக்கு வந்தேன். இன்ஜினியர் கொழந்த போட்டிருந்த நகைக்கு ஆசைப்பட்டு அந்தப் புள்ளையை நான்தான் தூக்கிட்டுப் போனேன்...''

வேலாயி பதறினாள்.

''இப்ப அந்தக் கொழந்தை எங்கய்யா?''

''நகையைக் கழட்டறப்போ அது ரொம்ப அழுது முரட்டுத்தனம் பண்ணிச்சு. அதோட மூச்சை அடக்கிட்டேன்...''

வேலாயி பைத்தியக்காரியைப் போல அவன் சட்டையைப் பிடித்து உலுக்கினாள்.

''நீ என்னய்யா சொல்றே?... அந்தக் கொழந்தையை என்ன பண்ணினே?''

''கொன்னுட்டேன்!''

''அடப் பாவி! நகைக்கு ஆசைப்பட்டு நீ பெத்த கொழந்தையையே கொன்னுட்டு யேய்யா!'' தலை தலையாக அடித்துக்கொண்டாள் வேலாயி.

சட்டென்று அவன் கையைப் பிடித்தான் நாகமுத்து. அவன் கைகள் நடுங்கின.

''வேலாயி... நீ என்ன சொல்றே?''

''ஆமாய்யா... உன்னைப் போலீசு புடிச்சுக்கிட்டுப் போறாங்கன்னு கேள்விப்பட்டு உன்னைப் பார்க்கறதுக்கு வயித்துப் புள்ளையோட ஓடிவந்தேன். எதிரே வந்த கார் முன்னால மயங்கி விழுந்திட்டேன். இன்ஜினியர் ஐயாதான் என்னைக் காப்பாத்தினாரு. பத்தாவது மாசம் எனக்குக் கொழந்தை பொறந்துச்சு. அப்போ என்ஜினியர் ஐயா, 'வேலாயி இவ்வளவு அழகான கொழந்தையோட நீ எங்கேபோறே? இந்தக் கொழந்தையோட எதிர்கால வாழ்வைக் கொஞ்சம் நெனைச்சுப் பாரு. எங்களுக்குக் கல்யாணமாகி பத்து வருஷத்துக்கு மேலாச்சு. இன்னும் குழந்தை பாக்கியம் இல்லே. வேணும்னா இந்தக் குழந்தையை எங்களுக்குக் கொடு. உனக்கு எவ்வளவு பணம் வேணும்னாலும் தர்றோம். எங்க மகளா நெனைச்சு வளர்த்துக் கறோம்'னாங்க. அதுக்கு நான், இந்த ஏழைக் கொழந்தையை வளர்க்கறீங்கன்னு சொன்னதே போதுமய்யா. எனக்குப் பணம் வேண்டாம். இந்தக் கொழந்தையோட எதிர்காலம் தான் எனக்கு முக்கியம். இந்தக் கொழந்தைக்குத் தாயாக இல்லாது போனாலும் பரவாயில்லே. ஒரு ஆயாவாக வாவது இங்கேயே இருக்கேன்னு வேண்டிக்கிட்டேன். அதுக்கு அந்த தெய்வங்க சம்மதிச்சாங்க. ஆனா 'இந்தக் கொழந்தைக்கும் மத்தவங்களுக்கும் நீதான் உண்மையான தாயுன்னு தெரியக் கூடாது'ன்னு சத்தியம் வாங்கிக்கிட்டாங்க. இந்த உண்மையை ஒரு நாளைக்கு உங்கிட்டே சொல்லலாம்னு இருந்தேய்யா... அதுக்குள்ளே...'' தலை தலையாக அடித்துக் கொண்டு அழுதாள் வேலாயி.



ஒருவர்:- ஜெயிலில் திரைப்படம் பார்த்தவர்களுக்கு எல்லாம் இரண்டு மாதம் தண்டனையைக் குறைத்து விட்டார்கள்!
நண்பர்:- ஏன்?
ஒருவர்:- ஒரே சமயத்தில் இரண்டு தண்டனை விதிக்கக் கூடாதாம். —எஸ். சந்திரசேகர்



இந்தியா சென்ற 1979ம் ஆண்டில் முப்பது லட்ச ரூபாய் பெறுமானத் தொகைக்குப் பல அன்னிய நாடுகளுக்கு மனித எலும்புக் கூடுகளை ஏற்றுமதி செய்துள்ளது. உலகிலேயே இந்தியா தான் மனித எலும்புக் கூடுகளை ஏற்றுமதி செய்வதில் முன்னணியில் உள்ளது.

—பி. நாராயணன்



அவர்: ''உங்க படங்களை எப்பவும் மோசமான தியேட்டர்களிலேயே ரிலீஸ் செய்றீங்களே... ஏன்?''
இவர்: ''தியேட்டருக்குப் படம் எவ்வளவோ தேவலைன்னு ரசிகர்கள் பேசிக்கிடத்தான்!''



அவர்: ''நம்ம ராமசாமி புதுசா பை வியாபாரம் ஏதுவும் ஆரம்பிச்சிருக்கானா...?''
இவன்: ''ஆமாம்! எப்படித் தெரியும் உனக்கு...?''
அவன்: ''பை த வேங்கிற இங்கிலீஷ் வார்த்தையை அடிக்கடி உபயோகிச்சுச் சற்று முன் ஒரு மணிநேரம் என் கழுத்தை அறுத்துட்டான்!''

—உ. ராஜாஜி

பலவிதமான சிந்தனைகளுடன் மாலதி வராந்தாவில் அமர்ந்திருந்த போது...

ஃபிரெண்ட், டிவி... சுலப நவலினைகளே...

எங்களுக்கு எதுவும் இப்போ வேண்டாம்.

நான் ரமேஷிட மிருந்து வரேன்.

அப்படியா? அவர் எங்கிருக்கிறர்? எப்படி இருக்கார்?

உன் அப்பாவை அவன் கொலைசெய்யவில்லை. அவனால் அதை உனக்கு நிரூபிக்க முடியும். உன் உதவி அவனுக்குத் தேவை.

ரமேஷ் குற்றமற்றவர்... எனக்குத் தெரியும்.

தயவுசெய்து சொல்லுங்க ரமேஷ் எங்கிருக்கார்?

உன்னை அவனிடம் அழைச்சிட்டுப் போக முடியும். ஆனால்...

உங்க சந்திப்பை நீ ரகசியமா பாதுகாக்கணும்.

சத்தியம் பண்ணறேன்.!

யாரும் சந்தேகிக்காம சிறுக்க நீ கொஞ்ச நேரம் கழிச்சுக் கிளம்பிவா. கேட்டுக்கு வெளியே இடதுபுறம் கார் காத்திருக்கும்.

புது ஆசாமி போய்விட்டான்.

யாரும் பார்க்காத போது நான் வெளியேறணும். எப்படி போவது?

## மறதி மேதைகள்

நீங்கள் மறதி மன்னரா? கவலைப்படாதீர்கள். உலக மேதைகள் பலரும் அப்படித்தான்.

தாமஸ் ஆல்வா எடிசன் ஒரு சமயம் வரி கட்டுவதற்காக அரசு அலுவலகத்துக்குச் சென்றிருந்தார். அங்கே இவருடைய முறை வந்தபோது, பெயரைச் சொல்லவேண்டும். தம் பெயர் என்ன என்பது தாமஸ் ஆல்வா எடிசனுக்கு மறந்து விட்டது! பக்கத்திலிருந்த அவரது நண்பர் நினைவூட்டினார்.

ஹில்பர்ட் என்ற விஞ்ஞானியின் மனைவி ஒருநாள் அவருக்கு முட்டை வைக்க மறந்து விட்டாள். நண்பருடன் பேசிக்கொண்டிருந்தபோது ஹில்பர்ட்டுக்கு அது நினைவு வந்தது. "என் மனைவி எவ்வளவு மட்டமானவள் பார்த்தாயா? இன்று எனக்கு அவள் முட்டை வைக்கவில்லை. எவ்வளவு காலமாக இப்படி நடந்து வருகிறதோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்!" என்றார்.

ஐசக் நியூட்டன் ஒரு சமயம் ஒரு குடியானவனிடம் ஒரு குதிரையை ஒப்படைப்பதற்காக நடத்திக் கொண்டு போனார். அப்பொழுது அவர் புத்தியில் ஒரு விஞ்ஞானப் புதிர் உதித்தது. அதைப்பற்றி யோசித்தபடி நடந்தார். வழியில் குதிரையின் கடிவாளம் கழன்றது. குதிரை

சற்றுநேரம் மாலதி யோசனையாக நடந்தாள். பிறகு தோட்டத்துக்குச் சென்றாள்.

நான் வெளியே வந்ததை யாரும் பார்க்கவில்லை என்று நினைக்கிறேன்.

ஒரு மரத்துக்குப் பின்னால் ஒளிந்திருந்த Z நிறுத்தப்பட்டிருந்த பழைய காரைப் பார்த்தான்.

இந்தப் பயல் உள்ளே போனான்; வெளியே வந்தான். இப்போ கார் ரிப்பேராகி விட்ட மாதிரி நடிக்கிறான்.

சற்று நேரத்துக்குப் பிறகு...

இவன் நடத்தை சந்தேகத்தை அளிக்கிறது.

மாலதி கேட்டுக்கு வெளியே வந்தாள்.

அதோ, கார்!

நல்லவேளை, வெளியே வந்தான்!

மாலதி காரை நோக்கிச் செல்வதை Z கவனித்தான்.

பேராசிரியர் மகள் அச்சலா!

மாலதி காருக்குள் ஏறிய போது அந்தப் புது ஆசாமி கார் பானெட்டை மூடினான்.

சீக்கிரம், உள்ளே ஏறு! உம்!

(தொடரும்)

திரும்பி வீட்டுக்குப் போய் விட்டது. நியூட்டன் அந்தப் பிரக்ஞையே இன்றி, கடிவாளத்தைப் பிடித்தபடி, நடையாளவன் வீடு போய்ச் சேர்ந்தார். அவன், "குதிரை எங்கே?" என்று கேட்ட பிறகுதான் அவருக்குக் குதிரை காணாமல் போனது தெரியவந்தது. குதிரை எங்கே போயிற்று என்று சொல்ல முடியாமல் தவித்ததோடு அவர் இவ்வளவு நேரம் எதைப் பற்றிச் சிந்தித்து வந்தாரோ, அதுவும் அவருக்கு மறந்து விட்டது!

—சிவஅரசி

x

## போர்டு 'பத்து'மா?

பொதுவாகப் பள்ளிகளில் ஒரு வகுப்புக்கு ஒன்று அல்லது இரண்டு போர்டுகள் இருப்பதுதான் வழக்கம். ஆனால், திருப்பராய்த்துறையிலுள்ள ராமகிருஷ்ண தபோவனத்தார் நடத்தும் பள்ளிக்குச் செல்பவர்கள் மூக்கின் மேல் விரல் வைக்காமல் திரும்ப முடியாது! ஒவ்வொரு வகுப்பிலும் பத்து போர்டுகள் இருக்கின்றன! ஒவ்வொரு பாடத்துக்கும் ஒவ்வொன்றும்! சில மாணவர்கள் பாடத்தை நோட்டில் சரியாக எழுதிக் கொள்ளத் தவறி விட்டால் பள்ளி விட்டதும் சற்று நேரம் தாமதித்து நிதானமாக எழுதிக் கொள்ளலாம் அல்லவா?

-எஸ். குமார்

## டீன் தரும் விளக்கம்

கல்கி 23-3-80 தேதியிட்ட இதழில், ''செய்திகள் வாசிப்பது செம்பியன்'' கட்டுரையைப் படித்துவிட்டுச் சென்னை பொது மருத்துவ மனை ''டீன்'' டாக்டர் சிவராஜ் கூறுகிறார்:

உண்மைக்குப் புறம்பான பல விஷயங்கள் இந்தக் கட்டுரையில் உள்ளன. 7–15 மணிக்கு எனக்கு ஒரு போன் செய்தி திரு வி. கே. ராஜகோபால் அவர்களிடமிருந்து வந்தது. நான் உடனே போலீஸ் கமிஷனர் அலுவலகம் சென்று அங்கு இருந்த சுமார் 45 பேர்களைப் பொது மருத்துவ மனைக்குக் கொண்டு வந்தோம்.

கிட்டத்தட்ட பன்னிரண்டு மருத்துவர்கள் (ஒன்றிரண்டு பேர்களைத் தவிர எல்லோருமே பேராசிரியர்கள்) உடனடியாக எல்லோரையும் கவனித்தார்கள். ஆர்.எம்.ஓ. டாக்டர் கோஷ்இருந்தார். நான் இரவு பத்து மணிவரை இருந்து யார் யாருக்கு என்ன என்பதைத் தெரிந்து கொண்டு அவ்வப்போதே அதற்குச் சிகிச்சையும் செய்யப்பட்டது. முன்னாள் அமைச்சர்கள் சௌந்தரராஜன் பொன்னையன் ஆகியோரும் எங்களுடன் இருந்து கவனித்துக் கொண்டார்கள். பத்தரை மணிக்குத்தான் நான் வந்தேன் என்பது அப்பட்டமான பொய். இவர்களையெல்லாம் மாணவர்களை அனுமதிக்கும் பிரத்தியேகமான வார்டில் அனுமதித்தோம். மண்டையைமொட்டை அடிக்காமல் வைத்தியம் செய்ய முடியாது. அதே போல்தான் ''எக்ஸ்ரே'' எல்லாம் எடுத்துப் பார்த்து விட்டு, பின் டாக்டர்கள் தான் தையல் போட்டார்களே தவிர ஸ்டாப் நர்ஸ்கள் அல்ல. இதில் வேடிக்கை என்னவென்றால் தினமும் ஒன்றிரண்டு தவறுகள் செய்கிறோம். ஆனால் அன்று தான் தவறுகளே செய்யவில்லை.

பேட்டி: **அசோக்குமார்**

# கண்ணாடியில் கராத்தே!



புகைப்படத்தைப் பார்த்தவுடன் பல நிமிடங்கள் பேசாமல் அதையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார் நடிகை ஸ்ரீப்ரியா. அவர்வாய் திறந்து சொன்ன முதல் வார்த்தை ''Fantastic Picture!'' ''இதை எடுத்த வரை பாராட்டாமல் இருக்க முடியாது. கமலின் முகத்தில் எந்த அளவுக்கு வேகமிருந்திருக்கும் என்பது நன்றாகத் தெரிகிறது. இந்த நிகழ்ச்சி நடந்ததற்குப் பிறகு கமலுக்குக் கையில் கண்ணாடி கீறி விஜயா நர்ஸிங் ஹோமுக்கு அவரை அழைத்துச் சென்றார்கள். கையில் தையல் போட்டுச் சரிப்படுத்தினர் மருத்துவர். ''பில் எவ்வளவு?'' என்று தயாரிப்பாளர் பிரகாஷ் கேட்க, ''பதினைந்தே ரூபாய்தான்!'' என்று பதில் வந்ததாம். அப்பொழுது தயாரிப்பாளர் பிரகாஷ் என்ன சொன்னார் தெரியுமா?'' கமலஹாஸனின் கையில் உள்ள சிறு காயத்தைத் தைப்பதற்குப் பதினைந்து ரூபாய்தான் ஆச்சு! இந்த விஷயத்தை ஸ்ரீதேவியின் தையல்காரரிடம் கூறவேண்டும்'' என்றாராம்.

'' 'ஆடு புலி ஆட்டம்' படப்பிடிப்பின் போது என்னுடைய காட்சிகளெல்லாம் எடுத்து முடித்து விட்டார்கள். சண்டை மாஸ்டரின் உதவியாளர் ஒரு பெரிய கண்ணாடியை உடைத்துக் கொண்டு மறுபுறம் விழுவது போல் ஒரு காட்சி. அவரும் தைரியமாகச் செய்துவிட்டார்! ஆனால் வயிற்றில் சரியான கீறல் விழுந்து விட்டது. ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். உடம்பு சரியாகிக் கொண்டு வரும் வேளையில் அவருக்கு ஒரு சிறு ஆசை. அவர் ஒரு பிரியாணிப் பிரியராம். ஆனால் அவர் அடிபட்ட வேளையில் பிரியாணி சாப்பிடக் கூடாது என்று தடை உத்தரவாம். அதையும் மீறி இவர் ஒருநாள் பிரியாணி சாப்பிட்டதன் விளைவு அந்த ஆசைதான் அவருடைய கடைசி ஆசையாக மாறிவிட்டது.

இந்தப் புகைப்படத்தைப் பார்த்தவுடன் கமலின் முகம் போன போக்கையும் பார்க்க வேண்டும். ஆங்காங்கே சிறு சுருக்கங்களை வரைந்தால் போதும். வயதான காலத்தில் கமல் எப்படி இருப்பார் என்பதை இப்பொழுதே கற்பனை செய்து பார்த்துக் கொள்ளலாம்.

''கண்ணாடி என்றவுடன் வேறொன்றும் என் நினைவுக்கு வருகிறது. நான் சமீபத்தில் படித்த ஒரு பயங்கரமான கதை. ஓர் ஆராய்ச்சியாளன் கண்ணாடித் துண்டுகளை மிகவும் மென்மையாக அரைத்துத் தினமும் கொஞ்சம் கொஞ்சமாக உணவில் சேர்த்துக் கொண்டான். என்ன ஆகும் என்று சோதிப்பதற்காக அரைத்தான். பரிசோதனையும் செய்ய ஆரம்பித்தான். எந்த விதமான மாற்றமும் நிகழவில்லை. சந்தோஷ மிகுதியால் தனது மனைவியை அழைத்து இறுக அணைத்தான். அவளோ துவண்டு விழுந்தாள். காரணம் கண்ணாடிப் பொடிகளைப் பரீட்சித்துப்பார்க்க அவளுக்கல்லவா கொடுத்திருக்கிறான்!

''இந்தக் காட்சிக்கு முன்போ அல்லது பின்போ தன் காதலியைக் காப்பாற்றத்தான் இந்தக் கண்ணாடியை உடைத்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். இல்லையென்றால் ஆட்டின் வடிவம் கண்ணாடியிலும் வருமா? இவர்கள் முன்பே இதைச் செய்யவில்லையாம்! அதுவாகத்தான் நிகழ்ந்ததாம். எனக்குத் திரும்பவும் இப்படத்தைக் கண்ணாடிச் சில்லுகளுக்கெல்லாம் பயப்படாமல் எடுத்த புகைப்படக்காரர் மோஹனாவைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை. உலகப்புகைப்படக் காட்சியில் இடம் பெறும் உயர்ந்த படம் இது!'' பேட்டி: **சலன்**



# கல்கி

**சந்தா விவரம்**

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |

**மானேஜர்**
கல்கி, சென்னை - 600 032




அந்தக் குட்டி ராட்சத யந்திரத்தை ஒருசேர முடுக்கி, தண்ணீருக்கடியில் போல்ட் போட்டு மாட்டி, நீருக்குமேல் நான் வீங்கி எழுந்து, ஹாச் நுனியில் சப்பளாமிட்டு, ஸ்விட்சைச் சுண்டும்படி மேயரைத் தூண்டினேன். நேர்த்தியான, சீரான விசைசலங்குடன் யந்திரம் படகின் அழுக்கான அடித் தண்ணீரைக் கலைந்தது.

எ டான் அண்ட் ஸாண்டி ஸைலன்ஸில்—
ஜான் டி. மக்டனல்ட்

## 14

இருள் மயம். விளக்குகள் அவிந்துவிட்டன. பூமியின் வயிற்றுக் குடைசல் போல் கடல் ஓசை.

மாலுமிகள் கப்பலின் போர்ட் ஸைட் பக்கம் சுமைகளையும் கனங்களையும் கொணர்ந்தார்கள்.

ஒற்றுமையாக வேலை செய்தார்கள். ஆபத்து அவர்களை ஒன்றுபடுத்திக் கடைசித்திறன்களை அளித்திருந்தது.

கப்பலின் ஆட்டம் பலமாக இருந்தது. கப்பலுக்கு என்ன நேர்ந்தது என்று இருட்டில் நிச்சயம் செய்ய முடியவில்லை

ஒவ்வொரு அரைமணிக்கும் ஒரு பெரும் ஓசை கேட்டு, கப்பலின் ஒவ்வொரு பலகையாகக் கழன்று ஓடிக்கொண்டிருந்தது.

புயலில் அகப்பட்ட ஒரு தீப்பெட்டி போல் ஜூலி சறுகுகளாக உடைந்து கொண்டிருந்தாள்.

சில மணி நேரங்களில் எல்லோரது இயக்கங்களும் நின்றுவிட்டன.

எல்லோரும் விதி கையில் தங்கள் உயிரை ஒப்படைத்து விட்டார்கள்.

அவரவர் பீதியான மனங்களுடன் கடைசி நேரங்களை எதிர்பார்த்து இருந்தார்கள்.

அது நெருங்கியது

**நா**வல் மரத்தண்டை பூஞ்சை வெய்யிலில் மல்லிக் ஆவலாயிருக்க,

சம்பகா வாய்க்காலைத் தாண்டிக் கீற்றுப் புன்னகையுடன் வந்தாள்.

தலையில் இரண்டிரண்டு மயிரிழைகள் காற்றில் மென்னாடின.

அரும்பு உதடுகள் படபடக்க, —இங்கே தானே இருக்கிறீங்க? என்றாள்.

—ஆமாம். உடனே விஷயத்தைத் தெரிஞ்சிட்டுப் போகலாம்னு இருக்கேன். கிருஷ்ணனைப் பார்த்தீங்களா? என்று.

ஆவல் பறக்கக் கேட்டான் மல்லிக்.

—பார்த்தேன். சார்ட்டைப் பத்தித் தெரியாதுன்னுட்டார்.

—நிஜமாத்தானா?

—நான் நம்பறேன்.

மல்லிக் முகவாயைத் தடவினான்.

—வேணும்னு தோண்டறேன்னார்; என்றாள் அவள் தொடர்ந்து.

—பாதுகாக்கப்பட்ட இடத்திலா?

—ஆமாம்.

—வேண்டாம் வேண்டாம் வேண்டாம்.

நாவல் நிழலுக்கு இருவரும் போனார்கள். விளிம்பில் ஜாலர் வேலைகள் செய்த ஒரு குடை நிழல். பட்டுப்போல் பரவித்தணுப்பாக இருந்தது.

உட்கார்ந்தார்கள்.

சம்பகாவைப் பார்த்தான்.

சுத்த இயற்கை உட்கார்ந்திருப்பது போல் இருந்தது.

மெல்லிய கைகளை நீட்டி, முழங்காலைப் பூட்டி இருந்தாள். சிற்றுடை கொஞ்சம் கீழே சிந்தி இருந்தது. விலாப்புறத்தில் சோளியில் குழல் வரிகள்! உடம்பின் செழிப்புக்கு ஆடை ஈடு காட்டவில்லை.

—என்ன செய்யலாம்னு யோசிக்கிறேன், சம்பகா! அந்த சார்ட் ரொம்ப முக்கியம்! அந்த இடத்திலேதான் அது இருக்கணும்!

—நீங்களே தோண்டுங்க....

—அப்படித்தான் செய்யணும். முதல்தரம் செஞ்சது வீணாவிட்டது.... அந்த ஆபீசருங்க வேறே நாய் மாதிரி....

—அவங்களுக்குத் தெரியாமப் பண்ணலாம்.

—எப்போ முடியும்?

—சாயங்காலம் ஆறுக்கு மேலே! சக்காக் காய் இருக்காது. நானும் கோயிலே முடிச்சுட்டு வந்துடுவேன்.

மல்லிக் பளிச்சிட்டான்.

—கூடை கிடைக்குமா சம்பகா!

—மம்மட்டி, கூடை எல்லாம் எடுத்துட்டு வர்றேன்.

மாலை ஆறரை.

அந்தப் பிரதேசம் சீக்கிரம் இருட்டாகி விடுகிறது. சோலைகளும், தோப்புகளும் கருக்கத்தில் கரிந்து விடுகின்றன. அந்தகாரம் ஜியோமெட்ரிக் அளவுகளில் மூடி போடுகிறது.

மல்லிக் காத்திருக்க, சம்பகா ஒரு முட்டை விளக்குடன் வந்தாள்.

அது முணுமுணுக்க இடுப்புக்கு மேல் மட்டும் வெளிச்சம் விழுந்து, பாதி உடம்பில் ஒரு யட்சிணி போல் மிதந்து வந்தாள்.

விளக்கை ஒரு கல்மேல் வைத்ததும், பக்கத்துப் பலாச மரங்களில் மெல்லிசான மஞ்சள் முலாம்.

—மல்லிக், மல்லிக்!

இரண்டு சொற்றுண்டங்கள் அவள் வாயினின்றும் பிரயாணம் செய்து, உலாவி மல்லிக்கைத் தேடின.

—வந்துட்டேன் சம்பகா!

இருட்டுக்குள்ளிருந்து இன்னொரு இருட்டாக எழுந்தான்.



இரட்டைத் தாவலில் அவன் பக்கம் வந்தான். கூடை, மண்வெட்டி, விளக்கு, அவள். எல்லாம் பிரமிப்பையும், இரக்கத்தையும் அவனிடம் உண்டாக்கின.

அவள் தொடர் முறுவலில் இருந்தாள். என்ன சொல்லப் போகிறான் என்று அவனது முகத்தைப் பின்பற்றிக் கொண்டே இருந்தாள்.

—சம்பகா, ரொம்ப நன்றி! உனக்குச் சிரமம் கொடுக்கிறேனில்லே?

—இல்லியே! என்று முறுவலை முழுசாகக் கீழே கொட்டினாள். —எனக்கும் பொழுதும் போகணும். துக்கத்தையும் மறக்கணும்.

அவன் தோண்ட ஆரம்பித்தான். கூடைகளை அவள் வாங்கி மண்ணை அப்பால் குவிக்க ஒரு சின்ன அம்பாரம் வளர்ந்து வந்தது. இருவரும் சீக்கிரம் வியர்வையுடன் களைப்பாகி விட, மல்லிக் மண்வெட்டியைக் கடாசி விட்டு மேடு ஏறி ஹப்பா என்று உட்கார்ந்தான். இளைத்தது.

அவள் மண்டி போட்டு உட்காரவும், வெளிச்சம் இருவரையும் கனவுகள் போல் காட்டியது.

—இவ்வளவு பாடுபட்டும் வியர்த்தமாய்ப் போனா என்ன செய்வீங்க? என்றாள் அவள்.

நீண்ட மூச்சு விட்டான் அவன்.

—எதுவும் செய்ய முடியாது! விதி!

—அப்போ ஏன் தோண்டறீங்க?

மண் பூசிய விரல்களால் முகத்தின் இழைவு ஒன்றைச் சொறிந்தான்.

—ஏதாவது செஞ்சிட்டு இருக்கணுமில்லே, வாழ்க்கையிலே! இல்லாட்டா அது சுமையாயிருக்கும். சிலர் வியாபாரம் பண்ணுவாங்க, சிலர் உத்தியோகம் பார்ப்பாங்க! நான் தோண்டறேன். ஆனா எல்லாருமே தேடறோம்! புதையலே! பெரிய புதையலே! அது கிடைக்கதுன்னு தேடறதை நிறுத்தி வாழ்க்கை பூரா நிம்மதியா இருக்கலாம்னு பார்ப்போம். அப்பவும் நிம்மதி வரப் போறதோ ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். இருந்தாலும் ஒரு மாயமான லட்சியத்தை மனத்தில் போட்டுக்கிட்டுத் தேடிக்கிட்டேதான் இருக்க வேண்டி இருக்கு.

அவள் கொஞ்சமாக முறுவலித்தாள்.

—இதை மாதிரி எத்தனை இடத்திலே தோண்டியிருக்கீங்க?

—இது நாலாவது இடம். ஆனா இங்கே ஆண்டவன் என்னை நிறையப் பச்சை விளக்கு காட்டியிருக்கான். அதனாலேதான் முனைஞ்சு— திடுக்கென்று எழுந்தான். அவன் பார்வை மண் பகுதியின் நடு வரிகளில் விழுந்தது. விளக்கின் வெளிச்சம் ஆடும்போது அங்கே காந்தமான மினுமினுப்பு?



என்னவாக இருக்கும்?

குழிக்குள் குதித்து, ஒரு குச்சி வேரை எடுத்து அந்த மினுமினுப்பைத் தோண்ட ஒரு உலோகத் துண்டு கரணங்களுடன் மேலே உதிர்ந்தது. கையில் எடுத்துக் கரையில் ஏறி, வெளிச்சத்தில் பார்த்ததும்,

—சம்பா, லாக்கெட்! என்றான்.

பக்கத்தில் வந்தாள்.

கண்ணாடிச் சட்டமிட்ட நெக்லஸ் கனல் லாக்கெட் அது. உள்ளே —ஐ லவ் யு, லிஸா— என்று எழுதியிருந்தது.

—ஒரு காதல் தூது, என்றான் அவன்.

அவள் கண்கள் வெளிச்சமிட்டன. வெட்கமான முறுவல் உதட்டில்.

தனிமை இடம், இருட்டு வேளை, ஒரே ஒரு ஆடவன் மூன்றின் நெருக்கமும் அந்த ருசிகரமான நாணத்தை ஏற்படுத்தியிருக்கும் என்று நினைத்தான்.

—சம்பகா!

—ஹாம்

—மௌனமாயிட்டியே!

அவளது உண்மை நிலையைக் கண்டுபிடித்து விட்டதால் ஒரு குழைவு ஏற்பட்டது.

—இல்லே, என்று இழுத்தாள் சமாதானம் காட்ட — யாரை யார் காதலிச்சாங்கன்னு யோசிச்சேன்.

-எலிஸா என்கிறது பால்மர்ஸனின் மனைவி. லிஸான்னு அவ செல்லப் பேரா இருக்கணும்.

—மனைவியே கணவனைக் காதலிக்கிறதாக எழுதிக் கொடுப்பாங்களா?

—மேனாட்டிலே அப்படிச் செய்வாங்க!

அவன் பேசவில்லை. லாக்கெட்டை முன்னும் பின்னும் புரட்டினான்.

—நீயே வெச்சுக்க சம்பகா! இந்த இடத்தைத் தோண்டினதுக்கு ஞாபகார்த்தமா....

ஒவ்வொரு இரவிலும் அவர்கள் அங்கே சந்தித்து மண்ணைத் தோண்டினார்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அடியாகக் கீழே இறங்கிக் கொண்டிருந்தது. பின் நிலா நாட்கள் அவை. முன் இரவுகள் கருண்டு கருத்திருக்க, இருவரும் ஒரு பொதுவான தேடலில் ஈடுபட்டார்கள். இருவருக்கும் அது குஷியாக இருந்தது.

சின்ன இடைவெளியில் அவள் கிளுக் கிளுக்குகள் காற்றில் மெல்ல அவிழ்ந்து கரைந்தன. அவன் அவளைப் பார்க்கும்போது நிரந்தரமான புன்னகை காட்டினான். இருவர் அயர்வுகளும் ஒருவரை ஒருவர் பார்க்கும் போது மாயமாய் மறைந்தன.

குழி ஐந்தடி கீழே இறங்கியதும், அவளும் உள்ளே இருந்து அவனுடன் வேலை செய்ய வேண்டி வந்தது.




பெட்ரோலுக்குப் பதில் சாராயத்தை உபயோகப்படுத்தலாம்! — செய்தி

மேலே அம்பாரத்துக்கு அப்பால் முட்டை வெளிச்சம் அம்போ என்று எரிந்து, வேண்டாத இடங்களை மஞ்சளாக்கி இருக்க, குழியின் ஐந்தடி இருட்டில் இருவரும் ஒரு லட்சியத்தில் அன்யோன்யமாக ஈடு கொண்டிருந்தார்கள்.

குறித்த ஒரே விஷயத்தைப் பற்றி எப்போதும் பேசுவது மறைந்து, பல விஷயங்களில் அவர்கள் பேச்சுப் பரவ, அவை ஒவ்வொன்றிலும் அவர்கள் கருத்துக்கள் தாமாக இணைந்து கொண்டிருந்தன.

சமயங்களில் அந்தக் குழியில் ஏறவோ, இறங்கவோ இணையும் வேளையில் அவனது ஒரு கரம் அவளுக்கு உதவி கொடுக்க, அந்த ஏற்ற இறக்கங்கள் சிரிப்பும் களிப்பும் கலந்த ஒரு இனிய தொடர் கதையாக மாறி வந்தது.

**வொ**ய்ட்டின் விருப்பப்படி கடலூர்க்கடியில் உள்ள அந்த இருபதடி மேடு பரிசோதிக்கப்பட்டது. இரண்டு அடிக்குச் சகதியும் அதற்கு அடியில் பவழப் பாறையும் தென்பட,

—நான்தான் சொன்னேனே, அது வெறும் மேடாக இருக்கும்னு, என்றார் டார்வின்.

—மிஸ்டர் டார்வின்! கடலுக்கு மேல் உள்ள பருவக் காற்று பற்றி உங்களுக்குத் தெரியலாம். ஆனால் கடலுக்குள்ளே இருக்கும் விஷயத்தைப் பற்றி உங்க அறிவு பூஜ்யம்! மற்ற இடம் பூரா சமதளமா இருக்கும் போது ஒரு இடத்தில் மட்டும் உயரமா பவளப் பாறை இருந்ததுன்னு என்ன அர்த்தம்? என்று கோபமாகக் கேட்டார் வொய்ட்.

—என்ன அர்த்தம் சொல்லு! என்றார் டார்வின்.

—கப்பலோ இப்பலோ உடைந்து கிடந்திருக்கும் அங்கே! அதுக்குமேலே பவழப் பூச்சி கூடு கட்டியிருக்கு. அதுதான் அர்த்தம்.

—கப்பலு இருபது அடி உயரம்தானா இருக்கும்?

—ஏன், உடைஞ்சு போய்ச் சிதறி இருக்காதா?

—நிச்சயமாய் ஜூலியில் ஒரு புத்தர் சிலை இருக்கிறதுக்கு நியாயமில்லே!

—இந்தச் சிலையை நான் ஒரு அமெரிக்கக் கோடீசுவரருக்குப் பத்தாயிரம் டாலருக்கு விற்பேன், தெரியுமா? இதமாதிரி வேறு ஏதாவது கூடக் கிடைக்கலாமில்லே?

அவர்கள் அந்தப் பிரதேசத்தில் ஒரு வாரம் உலாவினார்கள். முயற்சிகளில் எந்தப் பலனும் கிடைக்கவில்லை.

பிறகு ஸவுண்டிங் எடுத்துக் கொண்டு, தெற்கு நோக்கிப் பிரயாணம் செய்தார்கள்.

நாகப்பட்டினத்துக்குத் தென் கிழக்கே பத்து மைல் தூரம் சென்றதும் எக்கோ ஸவுண்டர் ஒரு குறிப்பிடத் தகுந்த வித்தியாசத்தைக் காட்டிக் கொடுக்க,

இரு டைவர்கள் மூழ்கினார்கள்.

முதல் கண்டுபிடிப்பை அவர்கள் மேலே அனுப்பவும்,

—ஆகா! ஒரு பீரங்கி! அநேகமா இது ஜூலிதான்! என்று இரைந்தார் வொய்ட்.

(தொடரும்)

# ஒவ்வொரு கனவும் நிறைவேற உதவும் திட்டத்தை வழங்குகிறது ஸ்டேட் பாங்க்

பெரென்னியல்
பென்ஷன் ப்ளான்
'நிம்மதியான
ஓய்வு காலத்'
திட்டம்



மைனர்ஸ் அக்கவுண்ட்
'என்
கேமிராவுக்கு
சேமிக்கும்'
திட்டம்





ஜனதா
டெபாஸிட
'என் சிறிய நாணயங்கள்
பெருந்தொகை
யாக வளர உதவும்'
திட்டம்






டெர்ம்
டெபாசிட்
'எங்கள் குழந்தையின்
கல்விக்காக சேமிக்கும்'
திட்டம்



சேவிங்ஸ் அக்கவுண்ட்
'என் நித்திய செலவுக்கு
பணம் சேமிக்கும்' திட்டம்



ரெக்கரிங் டெபாசிட்
எங்கள் குழந்தையின்
திருமணத்திற்காக
சேமிக்கும்' திட்டம்

ஸ்டேட் பாங்க் உங்கள் பணம் பன்மடங்
காகப் பெருகுவதற்கு
ஆர்வமூட்டும் 7 வழிகளைக்
காட்டுகிறது! ஒவ்வொரு
வருக்கும் ஒவ்வொரு
தேவைக்கும் ஏற்ற சேமிப்புத்
திட்டங்கள் எங்களிடம்



உள்ளன. இந்தத்
திட்டங்களைப் பற்றி
மேலும் விவரங்களறிய,
உங்களுக்கருகில் உள்ள
ஸ்டேட் பாங்க்
அலுவலகத்திற்கு
விஜயம் செய்யுங்கள்.

## சேமிப்பதற்கு
# ஸ்டேட் பாங்க்
## இந்தியாவின் மிகப் பெரிய பாங்க்

CHAITRA-SBI-575 TAM

# கல்லூரியில் 'குவிஸ்'





✻ ஜோதாஸ்ப்.

[அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரி, செய்யாறு, வட ஆர்க்காடு மாவட்டம். இக்கல்லூரியில் முறையாக ஒரு 'க்விஸ் கிளப்' இயங்குகிறது. ஒவ்வொரு வாரமும் 'க்விஸ்' போட்டிகள் நடத்தப்பட்டுப் பரிசுகள் வழங்கப்படுகின்றன. வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள கல்லூரிகளுக்கிடையேயான க்விஸ் போட்டியில் தொடர்ந்து இரண்டு ஆண்டுகளாக இக்கல்லூரி வென்றுள்ளது. பொருளாதாரப் பேராசிரியர் திரு டி. வி. பாலகிருஷ்ணனின் தலைமையில் இயங்கும் இந்த 'க்விஸ் கிளப்'பின் பணி மிகவும் பாராட்டுக்குரியதாகும். கல்கி க்விஸ் போட்டியில் பங்கேற்கத் திறமை அடிப்படையில் ஆறு மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இக்கல்லூரியில் பெண்களும் இணைந்து படிப்பதால் அவர்களுக்கும் வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும் என்ற நோக்கில் இரண்டு பெண்களையும் சேர்த்துக் கொண்டு எட்டு போட்டியாளருடன் க்விஸ் நிகழ்ச்சி தொடங்கிற்று. 'கல்கி' யின் கேள்விகளைக் கொண்டு 'க்விஸ் கமிட்டியின் அங்கத்தினரும், பௌதிக உதவிப் பேராசிரியருமான திரு ஆகா இமாம்கான் க்விஸ் மாஸ்டராக நிகழ்ச்சியை நடத்திக் கொடுத்தார்.

இக்கல்லூரியின் சிறப்புக்குப் பல வகையிலும் காரணமாக விளங்கும் கல்லூரி முதல்வர் டாக்டர் பி. எம். அண்ணாமலை அவர்கள் தலைமையில் நிகழ்ச்சி தொடங்கிற்று.



✻ பிரின்ஸிபால் டாக்டர் பி. எம். அண்ணாமலை அவர்களிடமிருந்து ரவி பரிசு பெறுகிறார்

போட்டியில் பங்கேற்றவர்கள் பின்வருமாறு:

(1) செல்வி ஆர். சுஜாதா
(2) செல்வி எஸ். நாகரத்தினம்
(3) திரு வி. கார்த்திகேயன்
(4) திரு பி. ஏகாம்பரம்
(5) திரு பி. சகாதேவன்
(6) திரு பி. எஸ். ரவி
(7) திரு ஜே. கிருஷ்ணன்
(8) திரு வி. பாலகிருஷ்ணன்

## கேள்விகள்

1. மெட்ரிக் அளவு முறையை முதன் முதல் நடைமுறையில் புகுத்திய நாடு எது? (செல்வி சுஜாதா சரியான விடையைக் கூறினார்.)

✻ நிர்வாகிகளும், பங்கேற்ற மாணவ மாணவிகளும்





2. Angstrom என்றால் என்ன?
(செல்வி நாகரத்தினம் சரியான விடையைக் கூறினார்.)

3. ஜிம்பாப்வே (ZIMBABWE) என்ற நாட்டைப் பற்றி ஏராளமாகச் செய்திகள் அடிபடுகின்றன. அந்நாட்டின் மற்றொரு பெயர் என்ன?
(சரியான விடையை ஏகாம்பரம் கூறினார்)

4. INTERNATIONAL UNDERSTANDING இற்காக அளிக்கப்படும் நேரு விருதை முதன் முதல் பெற்றது யார்?
(திரு ரவி சரியான விடையைக் கூறினார்)

5. யூகோஸ்லாவியாவின் தலைநகரம் எது?
(சுஜாதா சரியான விடையைக் கூறினார்)

6. மஞ்சள் நிறக் கொடி (yellow Flag) எதனைக் குறிக்கிறது என்று கூற முடியுமா?
(பாலகிருஷ்ணன் சரியான விடையளித்தார்.)

7. M.R.T.P.C. என்பதன் விரிவு என்ன?
(ரவி சரியான விடையைக் கூறினார்.)

8. 'Amnesty' என்றால் என்ன?
(ரவி சரியான விடையைக் கூறினார்.)

9. ஆட்சி மொழிகள் சட்டப்படி (Official Languages Act) ஹிந்தி இந்திய யூனியனின் ஆட்சி மொழியாக (Official language) எப்போதிலிருந்து அமுல் ஆயிற்று?
(பார்வையாளரிலிருந்து கணித உதவிப் பேராசிரியர் திரு பொன்ராஜ் பதிலளித்தார்.)

10. Puberty என்றால் என்ன?
(சகாதேவன் சரியான விடையைக் கூறினார்.)

11. Phoenix என்று அழைக்கப்படுவது எது?
(ஆங்கிலப் பேராசிரியர் சங்கரநாராயணன் சரியான விடையைக் கூறினார்.)

12. 'Decline and Fall of the Roman Empire என்ற புத்தகத்தின் ஆசிரியர் யார்?
(பார்வையாளரிலிருந்து தமிழ் உதவிப் பேராசிரியர் கந்தரேசன் பதிலளித்தார்.)

13. ஏசு கிறிஸ்துவின் பிறப்பிடம் எது? அது எங்குள்ளது?
(ரவி சரியான விடையைக் கூறினார்.)

14. ஆரோவில்லி (Aurovelle) எங்குள்ளது?
(நாகரத்தினம் சரியாக விடையளித்தார்.)

15. பிரதமராவதற்கு முன் மத்திய அமைச்சரவையில் திருமதி இந்திரா காந்தி எத்துறை அமைச்சராக இருந்தார்?
(சரியான விடையைக் கூறியவர் ரவி.)

16. முக்கிய பாத்திரமேற்று மிக அதிகமான படங்களில் நடித்து உலக சாதனை புரிந்த நடிகர் யார்?
(ஏகாம்பரம் இக்கேள்விக்கான சரியான விடையைக் கூறினார்.)

17. சித்ராபதி என்ற பாத்திரம் எந்த நூலில் வருகிறது? யார்?
(பார்வையாளரில் செல்வராஜ் சரியாக விடை அளித்தார்.)

18. மத்திய அமைச்சரவையின் தற்போதைய பெட்ரோலியத் துறை அமைச்சர் யார்?
(சரியான விடையைக் கூறியவர் ஏகாம்பரம்.)

19. இந்தியாவில் தயாரான முதல் மௌனத் திரைப் படம் எது? (Silent Film)
(எவரும் விடையளிக்கவில்லை.)

20. நேற்று (6–3–80) தனது தேசிய தினத்தைக் கொண்டாடிய நாடு எது?
(எவரும் விடையளிக்கவில்லை.)

21. டான்ஜிங் (Tanjing) என்றால் என்ன?
(எவரும் விடையளிக்கவில்லை.)

22. Frontier Mail எவ்விடங்களுக்கு இடையில் ஓடுகிறது?
(ரவி சரியாக விடையளித்தார்.)

## நேரு விருதை முதன்முதலில் பெற்றது யார்?

23. கோர்ஸிகா தீவின் (Corsica Island முக்கியத்துவம் என்ன?
(சகாதேவன் சரியான விடையளித்தார்)

24. Buffer State என்று எது அழைக்கப் படுகிறது?
(பாலகிருஷ்ணன் சரியான விடையைக் கூறினார்.)

25. அதிகமான மொழிகளில் இந்தியாவில் வெளியாகும் ஒரு பத்திரிகையின் தமிழ்ப் பதிப்பின் பெயரைக் கூறவும்.
(பார்வையாளர்களில் பிரியதர்சினி சரியாக விடையளித்தார்.)

26. ஹிந்து மதக் கோட்பாட்டின்படி மொத்தம் எத்தனை புராணங்கள் உள்ளன?
(பார்வையாளர்களில் இருந்து சரியான பதில் வந்தது.)

27. மேற்கு இந்தியக் கிரிக்கெட் அணியை முதன் முதலாக ஒரு டெஸ்ட் தொடரில் சமீபத்தில் வென்ற நியூஸிலாந்து கிரிக்கெட் அணியின் தலைவர் யார்?
(ரவி சரியான விடையைக் கூறினார்.)



"என் மனைவியுடன் பேசி நான் என்றுமே ஜெயித்ததில்லை; ஒரே ஒரு முறை ஜெயித்து விட்டதாக நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அப்போது வாக்குவாதம் முடியவில்லை என்று பிறகு தான் தெரிந்தது"

-ஜிம்மி கார்ட்டர்
-டைம்
-ராமுசாமி

28. மலபாரில் வசிக்கும் முஸ்லிம்கள் எப் பெயரில் அழைக்கப்படுகின்றனர்?
(பார்வையாளர்களில் இருந்து பொருளாதாரப் பேராசிரியர் பாலகிருஷ்ணன் பதிலளித்தார்.)

29. வரப்போகும் அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சி (Democratic Party) சார்பு வேட்பாளருக்காகப் போட்டியிடுபவர்கள் யார் யார்?
(ரவி சரியான விடையைக் கூறினார்.)

30. இதயத்தின் துடிப்பைக் கணிக்க உதவும் கருவி எது?
(கார்த்திகேயன் சரியாக விடையளித்தார்.)

31. 'Brain Drain' என்றால் என்ன?
(பாலகிருஷ்ணன் சரியான விடையைக் கூறினார்.)

32. ஆண்ட்ரி சகரோவ் (Andrei Sekharov) யார்?
(ரவி சரியான விடையைக் கூறினார்.)

(இக் கல்லூரி மாணவ, மாணவியரின் பொது அறிவுத்திறன் பிரமிப்பூட்டும் அளவுக்கு இருந்தது. போட்டியில் அதிக மதிப்பெண்களைப் பெற்று திரு ரவி கல்கியின் பரிசான ரூ. 50 பெற்றார். முதல்வர் டாக்டர் அண்ணாமலை பரிசுகளை வழங்கினார்.)

## விடைகள்

(1) பிரான்ஸ். (2) Angstrom is the unit of wave-length of light (3) ரொமானியா. (4) முன்னாளைய ஐக்கிய நாடுகள் சபையின் செக்ரடரி ஜெனரல் திரு ஊதாண்ட். 1965ல் இவ்விருதைப் பெற்றார். (5) பெல்கிரேட். (6) குறிப்பிட்ட பிராந்தியத்தில் தொற்று நோய் பரவியுள்ளதைக் குறிக்க மஞ்சள் நிறக் கொடி உபயோகப்படுத்தப்படுகிறது. (7) Monopolies and Restrictive Trade Practice Commission. (8) நாட்டின் தலைமைப் பொறுப்பில் உள்ளவர். (Head of the State) குற்றவாளிகளுக்கு அளிக்கும் பொது மன்னிப்பு Amnesty எனப்படுகிறது. (9) 26ம் தேதி ஜனவரி 1965. (10) பருவ முதிர்ச்சி அடையும் வயது (Age of sexual maturation (11) தன்னுடைய சாம்பலிலிருந்து மறுபடியும் உயிர் பெறுவதாகக் கூறப்படும் ஒரு பறவை. (12) எட்வர்ட் கிப்பன். (13) ஜெருசலத்தில் பெத்லஹேம். (14) பாண்டிச்சேரியில். (15) செய்தி, தகவல், ஒலிபரப்பு இலாகா. (16) மலையாள நடிகர் பிரேம் நசீர். சுமார் 500 படங்களுக்கு மேலாக நடித்துள்ளார். (17) சித்ராபதி மாதவியின் தாயாரும். மணிமேகலை நூலில் இப்பாத்திரம் வருகிறது. (18) பி. வி. சேத்தி. (19) புண்டலிக். (20) கானா. (21) யூகோஸ்லாவியாவில் உள்ள செய்தி நிறுவனம் (News Agency). (22) அம்ருத்சரஸிற்கும் பம்பாய்க்கும் இடையில் ஓடுகிறது. (23) நெப்போலியன் பிறந்த இடம். (24) நேரடி மோதலைத் தவிர்ப்பதற்காக இரண்டு பெரிய நாடுகளுக்கிடையே ஏற்படுத்தப்படும் சிறிய நாடு. (25) அம்புலி மாமா. (26) 18. (27) Geoff Howarth (28) மாப்ளா. (29) ஜிம்மி கார்டர், எட்வர்ட் கென்னடி. (30) கார்டியோ கிராஃப். (31) சொந்த நாட்டை விட அதிக அளவில் ஆராய்ச்சி செய்ய வாய்ப்புள்ளது என்ற காரணத்தால், தாய் நாட்டை விட்டு அயல்நாடுகளில், விஞ்ஞானிகள், மருத்துவர்கள், பொறியியல் நிபுணர்கள் போன்ற அறிவாளிகள் குடியேறிவிடும் நிலை Brain Drain எனப்படுகிறது. (32) அரசுக்கு எதிராகச் செயலாற்றினார் என்ற குற்றச்சாட்டின் கீழ் ரஷ்ய அரசால் சிறை வைக்கப்பட்டுள்ள ரஷ்ய விஞ்ஞானி. சமாதான நோபல் பரிசு பெற்றவர்.

தொகுப்பு : **நாயகன்**

புகைப்படம் : **நாதன் ஸ்டுடியோ செய்யாறு**

# சுவையான சர்ச்சை! வட்ட மேஜை

● 'என் பெயருடன் என் மனைவியின் பெயரைச் சேர்த்துக் கொள்வதில் நான் பெருமையே அடைந்திருக்கிறேன்' என்ற ஹேமா ஆனந்த தீர்த்தனின் கருத்தை 'அகாதமி விவகாரம்' கட்டுரையில் படித்தேன். இவரும் பெதிக் லாரன்ஸும் மட்டுமா? சாட்சாத் ராமச் சந்திரமூர்த்தியே மைதிலியின் பெயரைத்தன் பெயரோடு சேர்த்துக் கொண்டுதானே சோபிக்கிறான்! (விவகாரமும் தி. ஜானகிராமன் பற்றியதுதானே!) ஜானகிராமன், சீதாராமன் என்பது போல!
சென்னை-75 வி. ச. வாசுதேவன்

● பம்பாயில் ஸ்தாபித்துள்ள ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி கும்பாபிஷேக வைபவத்தைப் பற்றி எழுதியுள்ளதில் மேற்படி கோயில் கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ளவர்களில் முஸ்லிம் மதத்தவரான கான்ட்ராக்டரைப் பற்றி எழுதியுள்ளீர்கள். போபாலில் தென்னிந்திய சிற்ப பாணியில் நிர்மாணித்துள்ள ஏழு கோயில்களுக்குத் தேவையான ரூ. 3000 பெறுமானமுள்ள எலெக்ட்ரிக் விளக்குகள் மற்ற சாமான்களைக் கொடுத்தவர் ஒரு முஸ்லீம் பெருமகன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
போபால் சந்திரமௌளி

● இரண்டு திறமைகள் மோதிக் கொள்ளும் போது வாசகர்களுக்கு வகையான கனிகள் கிடைக்கும். அது போன்றதுதான் திருமதி ராஜம் கிருஷ்ணன் — ஹேமா ஆனந்ததீர்த்தன் சர்ச்சைகள்!
அகாதமி விவகார விவாதம் நேர்மையான நியாயமான முறையில் நடத்தியதற்கு அவர்களைப் பாராட்டுகிறேன்.
பெங்களூர்-21 ப. மூர்த்தி

● மனம் விட்டுப் பேசலாம் உரையாடல் இன்றைய சென்னை மக்களின் குறைகளையும் அவற்றை நிறைவேற்றுவதற்கு அரசு மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக் கூறுவதாக உள்ளது. ஏற்பாடு செய்த கல்கிக்கும், தயாரித்தளித்த குயிலி ராஜேசுவரிக்கும் வாசகர்கள் சார்பில் நன்றி.
பின்னத்தூர் எஸ். பழனிவேல்

● ஆட்டிப் படைக்கும் ஆவி வடிவ உண்மைச் சம்பவக் கட்டுரைகளை எழுதி அனுப்புங்கள் என வாசகர்களிடம் கல்கி கேட்டிருப்பது திரு காந்தனுக்குத் தெரியாதா? 'பகுத்தறிவோடு படம் பார்த்தால் ஆவியாக வந்து பழி வாங்குவது நம்ப முடியாத கற்பனை' என தெய்வீக ராகங்கள் பட விமர்சனத்தில் குறிப்பிட்டு 'ஸேம் ஸைடே' தாக்கியிருக்கிறாரே?
போடிநாயக்கனூர் எஸ். சையது முகம்மது

● செம்பியனின் செய்திகள் ஹாஸ்யமாகவும், அன்றுடநடைமுறைகளை மனத்தில் ஆழப் பதியும் வண்ணம் அருமையாகவும் இருந்தது.
மேலகிருஷ்ணன் புதூர் பிரபாலிங்கேசன்

● காந்தனின் சுரடி விமர்சனம் கண்டேன். சுரடியில் ஒரு போடி நடிகன் புகுந்து விளாசு கிறானே அவன் பெயரையும் கூறி அந்த நடிகனின் நடிப்பையும் இரண்டு வரி எழுதியிருக்கக் கூடாதா?
கும்பகோணம் டி. எஸ். சீதாராமன்

● ''மண்டையைக் கிழித்த கண்டல கனர் வலம்'' நண்பரின் கண்டல அறிக்கையைப் படித்தேன். மனம் நெகிழ வைத்த சம்பவம் தான்.
நெய்வேலி-2 பி. ஏ. செமியோன்

● இந்த இதழ் கல்கியைப் படித்தவுடன் ஏனோ ஒரு மன நிறைவு ஏற்படவில்லை. எதையோ படிக்க மறந்துவிட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. கடைசியில்தான் புரிந்தது, இந்த வாரம் கல்கியில் 'தலையங்கம்' வரவில்லை என்று! ஏன் சார் இப்படிச் செய்து விட்டீர்கள்?
சென்னை—33 ஆர். முரளிகுமார்

● ஜோதிர்லதா கிரிஜாவின் சிறுகதை ''புகை''யைப் படித்தேன். அருமையான கருத்தை அழகாக விளக்கியுள்ளார். சிறு வயதில் அறியாமையால் சில தீய பழக்கங்களுக்கு அடிமையாகி வரும் தற்போதைய மாணவர்களுக்குப் ''புகை'' கதை ஒரு பாடமாக அமைந்துள்ளது.
அரகண்டநல்லூர் ஆர். விஜயசேகரன்

● 'பம்பாயில் காஞ்சி' கட்டுரை படித்தேன். பக்தி பரவசமடைந்தேன். நேரில் காண முடியாத என்னைப் போன்ற பல வாசகர்கள் கண்டு மகிழப் புகைப்படங்களையும் வெளியிட்டிருந்தது கண்டு பெரு மகிழ்வு கொண்டேன்.
சென்னை-45 இரா. தியாகராஜன்

● 'ஓடிப்போனவனும் தேடி வந்தவனும்' கதை 'த்ரில்'லாக இருந்தது. முடிவு யாராலும் கணிக்க முடியாத ஒன்று!
திருச்சி-8 எஸ். பி. முருகப்பன்

---

## கையாலான ஜனாதிபதி!

அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி 'ஜேம்ஸ் கார்பீல்டு' ஒரே சமயத்தில் ஒரு கையால் லத்தீனும், மறு கையால் கிரேக்க மொழியும் எழுதுவாராம்! இவரைக் 'கையாலாகாத' ஜனாதிபதி என்று யாரும் சொல்ல முடியாது?

—சம்பத் குமாரி




## அத்தியாயம் 36

# கனோஜியின் தந்திரமும் திகைப்பும்

**வி**ருந்து மண்டபத்தின் முகப்பு அறையில் காத்திருந்த ஆங்கிலேயரை கனோஜி ஆங்கரே அறிமுகப்படுத்தியதும், அனந்துக்கு அதிர்ச்சியும், பேஷ்வாவின் கண்களில் சீற்றமும் ஏற்பட்டதைச் சாருவும் கவனித்தாளானாலும் அதற்கு அவளுக்குக் காரணம் ஏதும் புரியாததால் அவள் தனது அழகிய கண்களால் மிரண்டு விழிக்கவே செய்தாள். அவள் விழித்ததைப் பார்த்த கனோஜி ஆங்கரே சிறிது புன்முறுவல் கொண்டு அந்த வெள்ளைக்கார விருந்தினரை நோக்கி, ''இவளைப் போன்ற அழகி இந்த மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் யாரும் கிடையாது'' என்று மராத்தி மொழியில் பேச ஆரம்பித்தவர் சட்டென்று தமது தவறைத் திருத்திக் கொண்டு ''ஷீ ஈஸ் ரத்னா! யூ மஸ்ட் ஹாவ் ஹேர்ட் அபௌட் ஹர் (இவள் ரத்னா! இவளைப் பற்றி நீங்கள் கண்டிப்பாய்க் கேள்விப்பட்டிருப்பீர்கள்)'' என்று கோட்டைப் புளுகு ஒன்றையும் வினார்.

இந்தப் பொய்யைக் கேட்டதும் அங்கு வரும் வரை பேஷ்வாவுக்கும், சாருவுக்கும் அனந்துக்கும் இருந்த ஆனந்தமெல்லாம் எங்கோ பறந்து விட்டது. அவர்கள் மூவரும் மலைக் குடிசையை விட்டு வந்தபோது விஜயதுர்க்கத்தின் அழகையும் பலத்தையும் பாதுகாப்பையும் ரசித்துக் கொண்டும் விவாதித்துக் கொண்டுமே வந்திருந்தார்கள். ஏனென்றால் விஜயதுர்க்கம் அத்தனை அழகு வாய்ந்த துறைமுகக் கோட்டை. கனோஜியின் தலைமைத் தளம் அது. அதை வைத்துக் கொண்டுதான் அவர் பிரிட்டிஷாரையும், ஜன்ஜீரா ஸித்திகளையும் ஒருங்கே அச்சுறுத்தி வந்தார்.

பம்பாயிலிருந்து தெற்கே நூற்று எழுபது மைல் தூரத்தில் சின்னஞ் சிறிய துறைமுகமாயிருந்த விஜயதுர்க்கத்தை இணையற்ற கோட்டையாகவும், பலமான கடற்படைத் தளமாகவும் அமைத்திருந்தார் கனோஜி ஆங்கரே. விஜயதுர்க்கம் வாகோத்தம் நதியின் முகத்துவாரத்தின் தென் கரையில் இருந்தமையால் வடபுறத்தில் அதற்கு நதியின் பாதுகாப்பு இருந்தது. அதன் வடகிழக்கிலும் நேர் கிழக்கிலும் இருந்த மேற்குத் தொடர்ச்சி மலையின் பெரிய உச்சிகளும் காடுகளும் அதை நிலத்திலிருந்து யாரும் அணுக முடியாமல் செய்திருந்தன. நதியின் தென்புற முகத்துவாரத்தில் நூறு அடி உயரத்துக்கு மேல் மலைமீது எழும்பியிருந்த அந்தக் கோட்டையின் மீது சமுத்திரத்தின் அலைகள் மோதிக் கொண்டிருந்தன. துறைமுகத்தின் ஆழம் காரணமாக அங்கு மஞ்சூரா என்ற சின்னஞ் சிறிய பிரங்கிப் படகிலிருந்து, காலிவாத், குராப் முதலிய பெரிய கப்பல் வரை பலதரப்பட்ட நாவாய்கள் அன்றும் ஆடிக் கொண்டு நின்றதால் எந்தத் தாக்குதலுக்கும் விஜயதுர்க்கம் தயாராக இருந்ததென்பது சந்தேகமறத் தெரிந்தது. தவிர மூவகை அரண்களையும் 27 வட்டமான பிரங்கி நிலையங்களையும் கொண்ட விஜயதுர்க்கம் பார்ப்பதற்கு அழகையும் பயங்கரத்தையும் ஒருங்கே இணைத்துக் கொண்டிருந்தது.

இந்த அழகையெல்லாம் ரசித்துக் கொண்டும் மகிழ்ந்து பேசிக் கொண்டும் வந்த பேஷ்வாவுக்கும் சரி, அனந்துக்கும் சரி, விருந்து மண்டபத்தின் முகப்பு அறையில் கனோஜி செய்த அறிமுகம் மிகவும் அதிருப்தியை அளித்ததென்றால் அடுத்தபடி அவர் சிறிதும் முன்யோசனையின்றி எடுத்து வீசிய பொய் அவர்கள் கோபத்தை அளவுக்கு அதிகமாக்கவும் செய்தது.

இத்தனைக்கும் கனோஜியின் முகத்தில் எந்தவித மாறுதலும் இல்லை. அந்த ஆங்கிலேயர் எழுந்ததும் ''பேஷ்வா! அனந்த்! இஸ் ஈஸ் காப்டன் ஜேம்ஸ் மாக்ரே, தி ஸெலிப்ரேட் ஸெய்லர்'' என்று அவர் பெயரையும் மிகச் சாதாரணமாகவே உச்சரித்தார். அதனால் அதிர்ச்சியடைந்தாலும் அதை உதறிக் கொண்டு ''ப்ளீஸ்ட் டு மீட் யூ (உங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்)'' என்று அனந்த் அந்த மனிதருடன் கைகுலுக்கினான். பேஷ்வா பாஜீராவையும் நோக்கி மாக்ரே கை குலுக்க முயன்றதும் பேஷ்வா ஏதோ காரணமாகச் சாளரத்தண்டை சென்று கடலின் அழகையும் வாகோத்தம் நதியின் வசீகரத்தையும் ரசிக்கலானார்.

பேஷ்வா தன்னுடன் கைகுலுக்க இஷ்டப்படாததால் சாளரத்தின் மூலம் வெளியே பார்க்கிறார் என்பதைப் புரிந்துகொண்ட மாக்ரேயின் வெள்ளை முகம் குங்குமச் சிவப்பாகச் சிவந்தது. அந்தச் சமயத்தில்தான் கனோஜி அந்த இன்னொரு வெடி



குண்டையும் வீசி
னார். ''ஷீ ஈஸ்
ரத்னா. யூ மஸ்ட் ஹாப்
ஹேர்ட் அபௌட் ஹர்''
என்று. அதே சமயத்தில் பாஜிரா
விடமும் சென்று அவர் காதில் ஏதோ
முணுமுணுத்தார். அதற்குப் பிறகு பாஜி
ராவின் போக்கு முற்றும் மாறுக இருந்
தது. சரேலென்று திரும்பிய பாஜிராவ்,
''ஸார்கேல்! யூ ஹாவ் நாட் மேட் ப்ராப்
பர் இன்ஸ்ட்ரொடக்ஷன்ஸ்(ஸார்கேல் எங்
களை நீங்கள் சரிவர அறிமுகப்படுத்த
வில்லை)'' என்று கூறினார்.

''ஐ ஆம் ஸாரி'' என்று வருத்தம் தெரி
வித்த கனோஜி, ''காப்டன் மாக்ரே!
ப்ளீஸ் மீட் அவர் பேஷ்வா, அவர் எம்
பரர்ஸ் ரப்ரஸண்டிவ் (காப்டன் மாக்ரே!
எங்கள் சக்கரவர்த்தியின் பிரதிநிதி பேஷ்
வாவைச் சந்தியுங்கள்)'' என்றார்.

பேஷ்வாவின் முகத்தில் புன்
முறுவல் விரிந்தது. பாஜிராவ்
தமது மெல்லிய கையை நீட்டினார்
மாக்ரேயை நோக்கி. மாக்ரே
அதைப் பிடித்துப் பலமாகக்
குலுக்கினான். பிறகு சாருவை
நோக்கித் தலை வணங்கினார்.
''மிஸ்! யூ ஆர் ரத்னா! ரத்னா!
ஐ ஹாவ் ஹேர்ட் த நேம்
ஸம்வேர் (மிஸ்! நீங்கள்தான் ரத்
னாவா? ரத்னா! இந்தப் பெயரை
எங்கோ கேட்டிருக்கிறேன்)''
என்று குழம்பினான்.

இங்கு கனோஜி தமது
கொள்ளைக்கார கபா
லத்தைக் காட்டி
னார். மாக்ரேயின்

முதுகில் தட்டுவது போல் அறைந்து ''ஃபூல் மாக்ரே! இட் ஈஸ் த நேம் ஆப் ஸீ க்வீன் (முட்டாள் மாக்ரே! அதுதான் கடல் ராணியின் பெயர்)'' என்றார்

ஜேம்ஸ் மாக்ரே ஏதோ தேவ சாபத்தால் சிலையாக மாறிவிட்டவன் போல் நின்றான்' ''புரிகிறது! கடல் ராணி! ஸீ க்வீன்! ஸாகரி ராணி'' என்று பல மொழிகளில் முணுமுணுத்தான். இந்தக் காலத்தில் அவன் உளறியதை யாராவது கேட்டிருந்தால் அவனைப் பன்மொழி வல்லுனரென்று பாராட்டியிருப்பார்கள். நூற்றாண்டு மிகவும் முன்னதாக இருந்ததால் அத்தகைய பட்டம் எதுவும் பிரிட்டிஷ் காப்டனுக்குக் கிடைக்கா விட்டாலும் ஸார்கேல் அவனைப்பாராட்ட முற்பட்டு, ''மாக்ரே! உனக்கு நாலைந்து மொழிகள் தெரியும் என்பதை மறந்து விட்டேன்'' என்று கூறினார். பிறகு ''இங்கு அநாவசியமாகப் பேசிக் கொண்டிருந்தால் விருந்தை யார் சாப்பிடுவது?'' என்று கூறிக்கொண்டு மண்டபத்துக்குள் நுழைந்தார் முகப்பு அறையிலிருந்து.

ஆங்கரேயின் விருந்து மண்டபம் பெரிய மகாராஜாக்கள் மண்டபத்தையும் தோற்கடித்தது. பெரிய மேஜையில் பிரிட்டிஷார் விருந்து போல் வெள்ளைத் துணி விரிக்கப்பட்டு, பிளேட்டுகளும், ஸ்பூன் போர்க் முதலிய உணவருந்தும் கருவிகளும் வைக்கப்பட்டிருந்தன. மேலிருந்து ஷாண்டிலியர் விளக்கு ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்தது. விருந்து மண்டபத்தில் ஒரு மூலையில் விளக்கேந்தி நின்ற நிர்வாண வீனஸ் சிலையும் சரி, மற்றும் ஆங்காங்கு இருந்த அழகுப் பொருள்களும் சரி, எதுவுமே விலை கொடுத்து வாங்கப்படாதவை என்பதற்குச் சான்று கூறின. அவற்றையெல்லாம் பிரமையுடன் பார்த்த சாருவை நோக்கிய கனோஜி, ''ரத்னு! இவையெல்லாம் நமது வியாபாரத்தில் கிடைத்தவை'' என்று கூறி இடியிடியென நகைத்தார்.

அதைக் கேட்ட மாக்ரேயும் நகைத்தான். ''உங்கள் வியாபாரம்! அது என்னவென்பதை உலகம் அறியும். பை த க்ரேஸ் ஆப் ஹிஸ் மெஜஸ்டி கிங் ஜார்ஜ், ஐ வில் புட் ஆன் எண்ட் டு திஸ் (மேன்மை தங்கிய எங்கள் மன்னர் ஜார்ஜின் பெயரால் இதற்கு நான் முடிவு கட்டுகிறேன்)'' என்றும் கூறினான் மாக்ரே நகைப்பின் ஊடே.

''நீ செய்வாய். நீ பெரிய கடல் வீரன்'' என்று சிலாகித்த கனோஜி அனைவரையும் நாற்காலியில் உட்காரச் சொல்லித் தானும் உட்கார்ந்தார். தமக்கு இரு புறத்திலும் சாருவையும் அனந்தையும் உட்கார வைத்துக் கொண்டார். ''தாங்கள் மேஜையின் தலைப்பில் உட்கார வேண்டும்'' என்று பேஷ்வாவிடம் கூறி அவர் கையில் மெள்ள ஒரு காகிதத்தையும் திணித்தார் யாரும் பார்க்காமல்.

பேஷ்வா பாஜீராவ் மேஜையின் முகப்பில் தலைமை வகித்து உட்கார்ந்ததும் கனோஜி கண்ணைக் காட்ட அவர் பணியாட்கள் உணவு பரிமாறத் தொடங்கினார்கள். விருந்தின் முதல் பரிமாறல் முடிந்ததும் சாப்பிட முற்பட்ட மாக்ரேயைத் தடுத்த கனோஜி ''மாக்ரே! ஸ்டாப் இட்! யூ ஆர் எ கிறிஸ்டியன், ஸே க ப்ரேயர் (மாக்ரே! நீ கிறிஸ்துவன். முதலில் பிரார்த்தனை செய்)'' என்றார். அவர் கட்டளையை அடுத்து மாக்ரே கண்ணை மூடியதும் கனோஜியின் கண்கள்



பேஷ்வாவின் கண்களைச் சந்தித்தன. பேஷ்வா தமது கையில் திணிக்கப்பட்ட காகிதத்தைப் பிரித்துப் படித்துவிட்டு மடியில் செருகிக் கொண்டார். இருவர் கண்களும் ஏதோ பேசிக் கொண்டதைச் சாரு, அனந்த் இருவருமே கவனித்ததால், ஏதோ பெரிய நாடகம் நடத்தப்படுகிறது என்பதை உணர்ந்தார்கள். ஆகையால் ஏதும் பேசாமல் மாக்ரே கண்ணைத் திறக்கும் வரையில் பேசாமலேயே இருந்தார்கள். மாக்ரே பிரார்த்தனையை முடித்ததும் விருந்தை உண்ணலா மென்பதற்குச் சைகை காட்டிய கனோஜி அசுரன் போல் சாப்பிடத் தொடங்கினார்.

விருந்து ராஜபோகமாயிருந்தாலும் அங்கு கனோஜி விளைத்துவிட்ட சூழ்நிலை காரணமாக அனந்தோ, சாருவோ அதிகம் உண்ணவில்லை. பாஜிராவ் மிக நிதானமாகவும் கண்ணியமாகவும் சாப்பிட்டார். மது பரிமாறப்பட்ட போதுகூட கண்ணாடி டம்ளரிலிருந்து சிறிது சிறிதாக மதுவை உறிஞ்சினார் பேஷ்வா.



நடிகரின் மனைவி: அந்த மேஜையைக் கொஞ்சம் இப்படி நகர்த்திப் போடறீங்களா?

நடிகர்: ஐயோ! இதையெல்லாம் என்னாலே தூக்க முடியாது.

நடிகரின் மனைவி: அறுபது கிலோ ஹீரோயினை அலக்காத் தூக்கறீங்க, இது மட்டும் முடியாதோ?

—கே. ஆர். எம்.

அதற்கு நேர்மாறாக மதுவைப் பெரிய குப்பியிலிருந்து கடகடவென்று நேர்முகமாகவே குடித்தார் கனோஜி. "கோப்பை, டம்ளர் எல்லாமே மதுக்குப்பிக்கும் நமக்கும் இடையில் நிற்கும் எதிரிகள்" என்று உற்சாகத்துடன் கூவினார். ஒரு குப்பியைக் குடித்து முடித்ததும் பணிமகன் ஒருவன் கொண்டு வந்த பாத்திரத்தில் கை கழுவியதும் நன்றாக நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்து இரைந்து பேச ஆரம்பித்தார். "மாக்ரே! நான் சொன்னபடி உங்களுக்கு உதவ பேஷ்வா வந்திருக்கிறார். அனந்த் வந்திருக்கிறார். வந்த அனந்த் தனியாக வரவில்லை. கடல் ராணியையும் அழைத்து வந்திருக்கிறார். காலண்ட்ராலையும் உன் எதிரிகளான டெய்லர், இங்கிலண்ட் இவர்களையும் அழித்து விட இவர்கள் உதவுவார்கள்" என்றார்.

இந்தக் கோட்டைப் புளுகு அனந்தையும் சாருவையும் திகிலடையச் செய்தாலும் பாஜிராவ் எவ்வித சலனமும் அடையாமல் உட்கார்ந்திருந்தார். கனோஜிக்கு அனுகூலமாகப் பேசவும் தொடங்கினார். "காப்டன்! அவர் ஸார்கேல் ஹாஸ் டோல்ட் அஸ் அபௌட் யூ. வி ஆர். பிரிபேர்ட் டு ஹெல்ப் யூ (காப்டன் எங்கள் கடற்படைத் தளபதி உங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். உங்களுக்கு உதவ நாங்கள் தயாராக இருக்கிறோம்)" என்றார் பேஷ்வா.

பேஷ்வாவின் பேச்சு இன்னும் அதிசயமாயிருக்கவே அனந்த் நகைத்தான் மெல்ல.

"ஹொய் டு யூ லாப்? (ஏன் சிரிக்கிறாய்?)" என்று வினவினான் மாக்ரே.

"பிகாஸ் டூ எனிமீஸ் ஜாயின் டுகெதர் (இரண்டு எதிரிகள் ஒன்றுபடுவதால்)" என்ற அனந்த் "பிரிட்டிஷ்காரர்கள் மகாராஷ்டிரத்தின் பலத்தை உடைக்கப் பார்க்கிறார்கள். மகாராஷ்டிரர்கள் பிரிட்டிஷாரை இந்த நாட்டில் காலூன்ற விட இஷ்டப்படவில்லை. இப்பொழுது நீங்கள் இருவரும் இணைகிறீர்கள்)" என்றும் விளக்கினான்.

இதற்கு மாக்ரே பதில் சொல்லு முன்பு பாஜிராவே பேசினார். "மகாராஷ்டிரமும் பிரிட்டனும் பெரிய அரசுகள். இரண்டும் போரிடலாம். ஆனால் இரண்டும் கடற்கொள்ளைக்காரர்களை அனுமதிக்க முடியாது" என்று.

அனந்தின் உதடுகளில் இகழ்ச்சிப் புன்னகை உதயமாயிற்று. "கடற்கொள்ளைக்காரர்களை அனுமதிக்க முடியாதா?" என்ற அவன் கேள்வியிலும் இகழ்ச்சி ஒலித்தது.

"முடியாது." பாஜிராவ் மெதுவாகவும் திட்டமாகவும் பேசினார்.

"அப்படியானால் கனோஜி யார்? கடல் ராணி யார்?" என்று அனந்த் வினவினான்.

இந்தக் கேள்வி பேஷ்வாவின் அழகிய வதனத்தில் எந்தவித மாறுதலையும் விளைவிக்கவில்லை. "கனோஜி இப்போது கொள்ளைக்காரர் அல்ல. மகாராஷ்டிரத்தின் ஸார்கேல். கடல் ராணி இப்பொழுது கொள்ளைக்காரியல்ல. நமது மால்வான் கோட்டையின் தளபதி சங்கர் பந்தின் மகள்" என்றார் நிதானமாக.

"மால்வான் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்ததாயிருக்கலாம். ஆனால் ஷாஹு மன்னருக்கு அடங்கியதல்ல. சுந்தா சமஸ்தான ராஜாவின் ஆட்சிக்கு உட்பட்டது" என்றான் அனந்த்.

"அந்த ராஜா நமது ஆட்சிக்குட்பட்ட சிற்றரசர். அவருக்கு நாம் அபயமளிப்பதாக உறுதி கூறியிருக்கிறோம்" என்று அதற்கும் பதில் சொன்னார் பேஷ்வா.

பேஷ்வாவின் திடீர் மாறுதல் அனந்துக்குப் புரியவில்லையானாலும் ஏதோ மாக்ரேயின் தலைக்குப் பெரிய குல்லாய் தைக்கப்படுகிறதென்பதைப் புரிந்து கொண்டான்.

அந்தச் சமயத்தில் ஸார்கேல் தமது ராட்சஸக் கண்களை மாக்ரே மீது பதியவிட்டார். "மாக்ரே! இப்பொழுது உங்களுக்குத்

## மோபெட்களில் தனி இடம் – அதுவே சுவேகாவின் முதலிடம்.

# சுவேகா: சீரிய சமநிலைத் தன்மைக்கேற்ற தனிச்சிறப்புமிக்க வடிவமைப்பு, சொகுசான சவாரிக்கேற்ற முன்/பின்பக்க சஸ்பென்ஷன்கள் கொண்டது

மோபெட்களிலேயே சுவேகா ஒன்று தான் உட்புற உறுதியுடன் அமைக்கப் பட்டுள்ள ப்ரேம் அமைப்பைக் கொண்டு தனிச் சிறப்புமிக்க வடிவமைப்பைக் கொண்டுள்ளது. இதன் பலன்? அதிகப் படியான பாதுகாப்பு, நிலைத்த தன்மை மற்றும் சாலைப் பிடிப்புத்தன்மை — இவைகளை அதிகப்படியான பளு மற்றும் இருவர் சவாரி செய்யும் நிலையிலும் அளிக்கின்றது. இதுமட்டுமல்ல, சுவேகா வின் தனிச்சிறப்பு மிக்க முன்/பின்பக்க சஸ்பென்ஷன்கள் சாலையில் ஏற்படும் அதிர்ச்சிகளைத் தாங்கிக் கொண்டு, ஒவ்வொரு தடவையும் சுகமான சவாரியை அளிக்கின்றன.

இன்னும் பல சிறப்பு அம்சங்கள்:

- நீடித்த உழைப்பு மற்றும் அதிக கி.மீ. ஓட்டம் — இவற்றை அளிப்பதற் கேற்ற ஹார்டு க்ரோம் அலுமினியக் கலவையினுலான சிலிண்டர்கள்.
- சிக்கனம் மற்றும் எளிதான இயக்கத் திற்கு ஏற்ற, ஆட்டோ மாடிக் க்ளட்ச்.
- உறுப்புகளின் நீடித்த உழைப்பிற்கும், வழவழப்பாக உருளுவதற்கும் ஏற்ற நீடில் ரோலர் பேரிங்குகள்.

சுவேகா, விற்பனைக்குப் பிறகு பராமரிப்பு சேவைக்கான விரிவான அமைப்பு மற்றும் இந்தியா முழுவதிலும் உறுப்பு கள் கிடைக்கும் வசதி கொண்டது.

**Suvega**



மோபெட்ஸ்
இந்தியா
லிமிடெட்
திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

**சுவேகா – தன்னிகரற்ற மோபெடின் மறுபெயர்**

SAA/MIL:434

திருப்தியாகி விட்டால் நீங்கள் சிந்து தூர்க்கத்திலிருக்கும் காஸண்ட்ராவைக் கைப்பற்ற என்ன திட்டமிட்டிருக்கிறீர்கள் என்பதைச் சொல்லலாம்'' என்றார்.

ஜேம்ஸ் மாக்ரே அப்பொழுது சிந்தித்தான். அவன் மனத்தில் ஏதோ ஒரு சந்தேகம் எழுந்து கொண்டிருந்தது. அந்தச் சந்தேகக் குரலிலேயே ''நான் ஐந்து போர்க் கப்பல்களுடன் வருகிறேன் இன்னும் பத்து நாட்களுக்குள். ஆனால் நீங்கள் எந்த விதத்தில் உதவுவீர்கள்?'' என்று விசாரித்தான். அத்துடன் அவன் சும்மாயிருந்திருக்கலாம்.

''கடல் ராணி! முக்கியமாக உங்கள் உதவி தேவை. நீங்கள் என்ன செய்யக் கூடும்?'' என்றும் வினவினான் சாருவை நோக்கி.

அவன் கேள்வி கேட்ட அந்த நேரத்தில் தான் அந்த விபரீதம் ஏற்பட்டது. அதைக் கஜேந்திரகூட எதிர்பார்க்கவில்லை. விருந்து மண்டபத்தின் முகப்பு அறையில் வாசலை நோக்கிய அவரது ராட்சஸ விழிகளில் மீத மிஞ்சிய திகைப்பு விரிந்தது. அவர் கண்களில் கூட அச்சம் நிலவியது அளவுக்கு அதிகமாக. முகப்பு அறையின் வாசற்படியில் கடல் ராணி நின்றிருந்தாள். (தொடரும்)

---

மிகவும் பலவீனமான கதை. அத்துடன் குழப்பங்கள் வேறு. திரும்பத் திரும்ப வந்த நிகழ்ச்சிகளே வந்து அலுப்படையச் செய்கின்றன. பயந்து நடுங்கும் கோழைக் காதலனாக வரும் சுதாகர் தம் நடிப்பில் சுவாரஸ்யம் காட்டி நடித்திருப்பதாகத் தெரியவில்லை. அவருடைய அசிரத்தை காரணமாக, தாமாகவே வலிய வந்த சுவாரஸ்யமான சம்பவங்களும் கோழைத்தனமாகப்போய்விடுகின்றன.

படத்தின் டைரக்டர் யுவராஜாதான் கதாசிரியரும் கூட. ஆனால் கதையை அவரே சரியாகப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. நல்ல சுவையான அம்சங்களைக்கூட தம் அணுகுமுறைத் தவறுகளினால் கோட்டை விட்டிருக்கிறார்.

தன் கோழைத்தனத்தையும், அசட்டுக் கூச்சத்தையும் விட்டுவிட முயற்சி செய்யும் கதாநாயகன் கடைசிவரையில் சிரமப்பட்டுத் தவிக்கிறான். அவனது பக்கத்து வீட்டுக் காதலி உதவி செய்தும்கூட அவன் தேறவில்லை; ஓரளவுக்கு அவன் தைரியம் அடைகிற சமயத்தில் இரு குடும்பங்களும் தீராத மனஸ்தாபத்தினால் பிரிந்து விடுகின்றன. கடைசியில் ஒரு நண்பனின் உதவியால் காதலர்கள் ஒன்று சேருகின்றனர்.

பக்கத்து வீட்டுக் காதலி ராணியாக வரும் புதுமுகம் ஜயா அருமையாக நடித்திருக்கிறார். ராஜாவின் அசட்டுக் கோழைத்தனத்தைக் கண்டு அவர் சிரிக்கும் நமுட்டுச் சிரிப்பு ஒன்றே போதும், பார்த்து ரசிக்க.

நடிகர்களின் உதட்டசைவுகளுக்கும் பாடல்களுக்கும் ஏற்பட்டிருக்கும் ஒத்துழையாமை இயக்கம் வருந்தத் தக்கது.

வண்ணை ஒளிப் பதிவு நல்ல முறையில் கைகொடுத்திருக்கிறது. கலைமணியின் உயிருள்ள உரையாடல்கள் படத்தின் 'பிளஸ் பாயிண்ட்.'

சின்னச் சின்ன விஷயங்களில் கூட அக்கறை காட்டாததால், படம் மணல் வீடாகி விட்டது.

**- காந்தன்**

## சின்னச் சின்ன வீடு கட்டி

பட விமரிசனம்



# பெரிய இடத்துப் பெண்

பிரேம்சந்த்

தமிழில்
நெல்லை.எஸ்.வேலாயுதம்



பேனி மாதவ சிங் கௌரிபூர் கிராமத்தின் ஒரு நிலச்சுவான்தார். கிராமத் தலைவரும் அவர்தான். அவரது தாத்தா ஒரு காலத்தில் செல்வச் சீமானுயச் சீரும் சிறப்புடனும் வாழ்ந்தார். இன்றுகூட எந்த விதப் பழுதும் பார்க்க வேண்டிய அவசியமில்லாத நிலையிலிருக்கும் அந்தக் கிராமத்துக் கோவிலும், குளமும் அவரது செல்வச் சிறப்புக்கு, பெருந்தன்மைக்குச் சான்று பகர்கின்றன. அந்தக் காலத்தில் அவர் தமது வீட்டில் யானைக்குத் தீனி போட்டு வளர்த்தார் என்று சொல்வார்கள். இன்று யானைக்குப் பதில் ஒரு கிழடு தட்டிப் போன பெண் எருமை தான் உள்ளது.

பேனிமாதவ சிங் தமது சொத்தில் பாதியை வழக்கறிஞர்களிடம் கொடுத்தே காலி செய்து விட்டார். அவருடைய இப்போதைய வருமானம் ஆண்டொன்றுக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் போகாது. தாக்கர் சாஹிப்புக்கு இரண்டு குமாரர்கள். மூத்த மகனின் பெயர் ஸ்ரீகாந்த் சிங். படாத பாடுபட்டு அவன் ஒரு பட்டதாரியானன். தற்போது அவன் ஒரு காரியாலயத்தில் பணி புரிகிறன். இளைய மகன் லால் பஹாரி சிங் வாட்டசாட்டமான இளைஞன். வட்ட முகமும் அகன்ற மார்பும் கொண்ட அழகன். ஒவ்வொரு நாள் காலையிலும் அவன் கறந்தவுடன் இரண்டு சேர் எருமைப் பாலைக் குடிப்பான். தன் உடம்பைக் கட்டுமஸ்தாக வைத்துக் கொள்வதில் அவன் கண்ணும் கருத்துமாக இருந்தான். ஸ்ரீகாந்த் சிங்கோ இதற்கு நேர்மாருக விளங்கினன். 'பி'. 'ஏ' இவ்விரண்டு எழுத்துக்களுக்காக அவன் இந்தக் கல்யாண குணங்கள் அனைத்தையும் தியாகம் செய்து விட்டான். எனவேதான் இப்போது அவன் மருத்துவ நூல்களை விரும்பிப் படித்தான். ஆயுர்வேத மருத்துவத்தில் அவன் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தான். காலை நேரங்களிலும், மாலையிலும் அவனது அறையில் மருந்துக் கலவையின் ஒலியைக் கேட்கலாம்.

ஸ்ரீகாந்த் ஓர் ஆங்கிலப் பட்டதாரியாக இருந்தும் கூட அவனுக்கு ஆங்கிலேய வாழ்க்கை முறையில் ஈடுபாடு இடையாது. இதற்கு மாருக அந்த வாழ்க்கையை முற்ருக வெறுத்தான். எதிர்த்துப் பிரசாரம் செய்தான். கிராம மக்கள் அவனை மதித்துப் போற்றுவதற்கு இதுவும் ஒரு காரணம்.

ஆனந்தி ஒரு பெரிய இடத்துப் பெண். அவளது தந்தை ஒரு எஸ்டேட் அதிபர். எஸ்டேட் அதிபர் என்ருல் கேட்கவா வேண்டும்? பெரியதொரு பங்களா. ஒரு யானை. மூன்று விலையுயர்ந்த நாய்கள். வேட்டைப் பறவைகள். வேட்டைக்கான ஆயுதம். மணியடித்ததும் ஓடிவரும் வேலையாட்கள். அனைத்தும் உண்டு அவரது இல்லத்தில். 'பூப் சிங்' என்ற பெயர் படைத்த அவர் ஒரு கௌரவ மாஜிஸ்டிரேட். அவர் ஒரு திறமைசாலி. தாராள மனம் படைத்தவர். துரதிருஷ்ட வசமாக அவருக்கு ஆண் வாரிசு இல்லை. அவருக்கு ஏழு புத்திரிகள் பிறந்தனர். அனைவரும் உயிரோடிருந்தனர். ஆரம்பத்தில் உற்சாக வேகத்தால் மூன்று புதல்விகளின் திருமணத்தை மிக ஆடம்பரமாக நடத்திவிட்டார். இதனல் அவர் கடனாளியாக நேர்ந்தது. கடன் பட்ட நெஞ்சம் கலங்கியது. ஆடம்பரச் செலவைக் குறைத்

தார். ஆனந்தி அவருக்கு நான்காவது மகள். சகோதரிகள் அனைவரிலும் ஆனந்திதான் அழகும் அறிவும் ஒருசேரப் பெற்றவள். தாக்கர் சாகிப் ஆனந்தியின் திருமணத்தைப் பற்றிக் கவலைப்பட்டார். திருமணத்தைப் பற்றி நினைக்கும்போது கடன் தொல்லை அவரது மனத் திரையில் ஓடியது. அதே சமயம் ஆனந்தியை அவர் ஓர் அதிர்ஷ்டக் கட்டை எனக் கருதவும் துணியவில்லை. இந்தச் சூழலில்தான் ஒரு நாள் ஸ்ரீகாந்த் அவரிடம் ஒரு நன்கொடை கேட்டு வந்தான். பூப் சிங்கை அவன் கவர்ந்து விட்டான். அடுத்து ஆனந்திக்கும் அவனுக்கும் ஒரு நல்ல முகூர்த்தத்தில் திருமணம் நடந்தேறியது.

புக்ககம் புகுந்த ஆனந்தி முற்றிலும் புதிய சூழ்நிலையைக் கண்டாள். குழந்தைப் பருவம் முதல் அவள் கண்டு களித்த — அனுபவித்த ஆடம்பர வாழ்க்கையின் அடையாளமே அங்கில்லை. யானைகள் — குதிரைகள் பூட்டிய வாகனங்களில் பவனி வந்த அவளுக்கு இங்கு அழகானதொரு 'சாரட்'டின் ஓவியத்தைக் கூடக்காண முடிய வில்லை. அது ஒரு சாதாரணக் கிராமம். அதில் இவளது வீடு ஒரு சாதாரண வீடு. ஆனால் ஆனந்தி புதிய சூழ்நிலைக்கேற்பத் தன்னைத் தயார் செய்து கொண்டாள். ஆடம்பர வாழ்க்கையின் அடையாளத்தைக் கூடத் தெரிந்திராத சாதாரணப் பெண்ணாகத் தன்னை மாற்றிக்கொண்டு விட்டாள்.

## 2

ஒருநாள் மதியம் இரண்டு பறவைகளைக் கொண்டுவந்த லால் பிஹாரி சிங் "அண்ணி! எனக்குப் பசிக்கிறது. இவற்றைக் கொன்று எனக்குச் சீக்கிரமே கறி சமைத்துப் போடுங்கள்!" என்றான். ஆனந்தி ஏற்கனவே சமையல் வேலையை முடித்துவிட்டு அவனுக்காகக் காத்திருந்தாள். இப்போது புதிய கறியைத் தயாரிக்கும் பணியைத் தொடங்கினாள். நெய் குவளையைப் பார்த்தாள். அரைப் பவுண்டு நெய்கூட இருக்காது. அவளோ பெரிய இடத்துப் பெண். சுருக்கிச் செய்து பழக்கப்பட்டவள் இல்லை. மாமிசத்தில் அனைத்து நெய்யையும் கொட்டி விட்டாள். லால் பிஹாரி சாப்பிட உட்கார்ந்தான். பருப்புக்கு நெய் இல்லை. "பருப்பில் ஏன் நெய் போடவில்லை?" எனக்கேட்டான்.

"அனைத்துநெய்யையும் மாமிசத்தில் ஊற்றி விட்டேன்!" என்றாள் ஆனந்தி. லால் பிஹாரிக்குக் கோபம் வந்தது. "உன் அப்பன் வீட்டில் நெய் ஆறாக ஓடிக் கொண்டிருக்குமோ" என்று கோபத்துடன் கூறினான்.

ஒரு பெண்ணுக்கு வில் அம்பு பட்ட புண் கூட வேதனை தராது. ஆனால் சொல்லம்பு பட்ட புண்ணோ! தான் பிறந்த வீட்டைப் பற்றி இழிவாகப் பேசுவதை அவளால் தாள முடியாது. முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு "செத்துப் போன யானை கூட பல லட்சம் மதிப்புள்ளது. எங்கள் வீட்டு



வேலைக்காரர்களுக்குக் கூட தினசரி இவ்வளவு நெய் போதாது'' என்றாள் ஆனந்தி.

லால் பஹாரி வெகுண்டெழுந்தான். சாப்பாட்டுத் தட்டை வீசி எறிந்தான். ''உன் நாக்கை அறுத்து விடுவேன்'' என்றான்.

ஆனந்தியும் ஆக்ரோஷமடைந்தாள். அவளது கன்னங்கள் கன்றிச் சிவந்தன.

''அவர் இன்று இங்கிருந்தால் உங்களுக்கு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நல்ல பழக்க வழக்கங்களை — நாகரீகத்தைக் கற்றுக் கொடுத்திருப்பார்'' என்றாள்.

கோபம் மிகுந்த அவன் தனது ஒற்றைக் கால் செருப்பை அவள் மீது வீசியவாறே, ''உங்கள் இருவர் கணக்கையும், உனக்கு இவ்வளவு திமிரை உண்டாக்கிய அவனது கணக்கையும் முடிக்கிறேன்'' என்று உறுமினான்.

ஆனந்தி செருப்பைக் கையினால் தாங்கினாள். செருப்பிலிருந்த ஆணி தைத்து அவளது ஒரு விரலில் காயம் ஏற்பட்டது. காற்றில் பறக்கும் ஓர் இலையைப் போன்று கோபத்தில் நடுங்கிய அவள் தனது அறைக்குச் சென்று அமர்ந்தாள். மிகுந்த சிரமத்துக்குப் பின் மனப் போராட்டத்துக்குப் பின் ஆனந்தி தனது கோபத்தைத் தணித்துக் கொண்டாள்.

## 3

ஸ்ரீகாந்த் சிங் சனிக்கிழமைதான் வீட்டுக்கு வருவான். வியாழக் கிழமை இந்தச் சம்பவம் நிகழ்ந்தது. இரண்டு நாட்கள் ஆனந்தி மனம் உடைந்து போயிருந்தாள். சாப்பிடவில்லை. அவனுக்காகக் காத்திருந்தாள். வழக்கம் போல் சனிக் கிழமை மாலை அவன் வந்து சேர்ந்தான். முற்றத்தில் அமர்ந்தவாறே கிராமத்து மனிதர்களிடம் பல்வேறு விஷயங்களைப் பற்றிப் பேசினான். இவர்களிடமிருந்து துண்டு முறித்துவிட்டுப் போவது ஸ்ரீகாந்துக்கு முடியாத ஒன்றாக இருந்தது. ஆனந்தி ஒவ்வொரு நிமிடத்தையும் ஒரு யுகமாகக் கழித்தாள். சாப்பாடு நேரம் வந்தது. ஒருவாறாகக் கூட்டம் கலைந்தது. வெளி ஆட்கள் போனதும் லால் பஹாரி விஷயத்துக்கு வந்தான். ''அண்ணா! அண்ணியைக் கொஞ்சம் நாவடக்கிப் பேசச் சொல்லுங்கள். இல்லாவிட்டால் என்றைக்காவது ஒரு நாள் இந்த வீட்டில் விபரீதம் நிகழும்'' என்றான்.

பேனி மாதவ சிங்கும் இளைய மகனின் பேச்சை ஆமோதித்தார். ''ஆம் அப்பா! ஆண் பிள்ளைகளிடம் வாய்த் திடுக்காகப் பேசுவது சரியில்லை'' என்றார்.

''அண்ணி பெரிய இடத்துப் பெண்ணாக இருக்கலாம். அதற்காக நாம் மட்டமானவர்கள் என்பதில்லை'' என்றான் பஹாரி.

ஒன்றும் புரியாத ஸ்ரீகாந்த், ஆர்வம் பொங்க, ''என்ன நடந்து விட்டது?'' எனக் கேட்டான்.

''பெரிய விஷயம் ஒன்றுமில்லை. ஒன்றுமில்லாததற்கு அண்ணி என்னிடம் கடுமையாகப் பேசிவிட்டார்கள். அண்ணியின் பெற்றோர்களுக்கு நாம் கால் தூசுகூடப் பெற மாட்டோம் என்று நினைக்கிறார்கள்'' என்றான் பஹாரி.

சாப்பாடு முடிந்தது. ஸ்ரீகாந்த் ஆனந்தியிடம் சென்றான். கண்களில் நீர் பொங்க ஆனந்தி மனம் கலங்கி நின்றாள்.

''நான் ஓர் அதிருஷ்டக் கட்டை. இல்லாவிட்டால் ஒரு பட்டிக்காட்டான், ஒரு பியூன் வேலைக்குக் கூட லாயக்கில்லாத கைநாட்டுப் பேர்வழி என்னைச் செருப்பால் அறைந்து இவ்வாறு காயப்படுத்துவாரா?'' என்றாள்.

''நடந்ததனைத்தையும் சொல்'' என்றான் ஸ்ரீகாந்த்.

''நேற்று முன் தினம் உங்கள் அன்புத் தம்பி கறி சமைத்துக் கொடுக்கும்படி கேட்டார். நெய்க் குவளையில் சிறிதளவு நெய்யே இருந்தது. அத்தனை நெய்யையும் மாமிசத்தில் ஊற்றிவிட்டேன். சாப்பிட உட்கார்ந்ததும் பருப்புக்கு நெய் எங்கே என்றார். என் குடும்பத்தினரைப் பற்றிக் கண்டபடி பேசினார். என்னால் அதைக் கேட்டுக்கொண்டு பேசாமலிருக்க முடியவில்லை. 'எங்கள் வீட்டு வேலைக்காரர்களுக்குக் கூட இவ்வளவு நெய் வேண்டும். இதையெல்லாம் நாங்கள் கணக்குப் பார்ப்பதில்லை' என்றேன். அவ்வளவுதான். செருப்புப் பறந்தது.'' நடந்ததனைத்தையும் ஆனந்தி விவரித்தாள்.

ஸ்ரீகாந்த் பொங்கினான். ''அப்படியா? அந்தப் பயலுக்கு அவ்வளவு திமிரா?'' என்றான்.

கோபம் என்னும் எரிநெருப்புக்கு அவளது கண்ணீர் எண்ணெய் வார்த்தது. அமைதி இழந்த அவன் இரவு முழுவதும் தூங்காத கண்களைத் துணை கொண்டு அங்குமிங்குமாக நடந்தான். அவனது அமைதி குலைந்தது. எப்பொழுது விடியும் என்று காத்திருந்த அவன் பொழுது புலர்ந்ததும் தந்தையிடம் சென்றான். ''அப்பா! இனியும் என்னால் இந்த வீட்டில் இருக்க முடியாது'' என்றான்.

நிலைகுலைந்த பேனி மாதவசிங், ''ஏன்? எதற்காக?'' என்றார்.

''எனக்கும் கொஞ்சம் தன்மானம் இருக்கிறது. இப்பொழுதெல்லாம் இந்த வீட்டில் அநியாயம் தலைவிரித்தாடுகிறது. மூத்தவர்



சிறு வயதில் உங்களுக்குப் பல்வலி வந்தபோது பாட்டி
கிராம்புத் தைலம் தடவிக் குணப்படுத்தினரோ நினைவிருக்கிறதா?
உங்கள் பல் டாக்டர் இன்று கூட அதை உபயோகிக்கிறார்!

# இதோ
# புதிய ப்ராமிஸ்

## காலங்காலமாக பயன்பட்டுவரும்
## கிராம்புத் தைலம் கொண்ட இணையற்ற டூத்பேஸ்ட்

பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

கிராம்புத்தைலம் கொண்ட புதிய ப்ராமிஸ்
அளிக்கும் நன்மையைப் பாருங்கள்:

1.
பற்சிதைவி
லிருந்து
பாதுகாக்கிறது.



2.
வாய்க்குப்
புத்துணர்ச்சி
தருகிறது,
துர்நாற்றத்தை
அகற்றுகிறது




## ஆரோக்கியமான பற்கள், ஈறுகள் மற்றும்
## புத்துணர்ச்சிமிக்க மூச்சுக்கு ப்ராமிஸ்

CHAITRA-BLS-369 TAM

நான்ஆனான் தான்ஆனான் நானும்தா னும்ஆனான்
தேன்ஆனான் தெள்அமுதாய்த் தித்தித்து நிற்கின்றான்
வான்ஆனான் ஞான மணிமன்றில் ஆடுகின்றான்
கோன்ஆனான் என்உள் குலாவுகின்ற கோமானே

— திருஅருட்பா

---

விளம்பர உதவி

**SRI SAKTHI TEXTILES LIMITED**

P. O. BOX No. 36, POLLACHI

TEXMARK: 3642

| | | |
|---|---|---|
| Total Ring Spindles installed | : | 25,032 |
| Total Ring Spindles at work | : | 25,032 |
| Total Doubling Spindles at work | : | 3,208 |

MANUFACTURING YARN IN COUNTS:

| | | |
|---|---|---|
| Combed Yarn in Hanks | : | 60s, 80s, & 100s |
| Doubled Yarn in Hanks | : | 2/80s,2/60s & 2/100s |
| Cone Yarn in Counts | : | 34s, 60s, 80s, & 100s |

**SAKTHI YARN POSSESSES ALL UNIQUE QUALITIES**

ஊறுகாயே
உணவா?

**ஸ்பென்ஸர்ஸ்**
ஊறுகாய்
என்றால்

அப்படித்தான்
அடிக்கடி ஆகிவிடுகிறது




S 2833A TAM



ஸ்பென்ஸர் & கோ. லிட். சென்னை




கயலாடும் மைத்தடங்கண்
கருங்குவளைப் பூதானோ
குயிலாடும் பண்ணிசைக்கும்
கனிச்செவ்வாய் நீதானோ
வயலோரச் செவ்வாழை
வளைந்தெடுத்த துன்காலோ
மயிலாடும் ஒய்யாரம்
மதிப்புற்ற துன்பாலோ

நயனங்கள் வரவேற்க
நல்லிதயம் குடியேறி
மயங்கியவென் மனத்துக்கு
மல்லிகையே மாற்றென்ன?
அயலார் போல் ஒதுங்கிடுமுன்
அருகிருக்கும் பாக்கியத்தை
இயன்மகளே எனக்கருள்வாய்
இணக்கமெனச் சீக்கிரமே!

மயன்செதுக்கா மாதுளையே
மலிப்பிறந்த செய்யாளே
பயிர்ப்பெதனால் பதிலுரைப்பாய்
பவளமெனும் வாய்திறந்து
தயக்கமென்ன தாரகையே
தாரணியில் பேறுடைய
இயக்கவொரு இல்லாளாய்
ஏற்றதொரு துணையாவாய்!

—மதுரை காளிதாசன்



களுக்கு மதிப்பும் மரியாதையும் தர வேண்டியவர்கள் திமிர் பிடித்தலைகிறார்கள். நான் மற்றவர்களுக்காக உழைக்கிறேன். வீட்டில் இருப்பதில்லை. நான் வீட்டில் இல்லாத போது என் மனைவி மீது செருப்பு வீசப்படுகிறது. அடியும் பட்டுக் கொண்டு அவள் பேசாமல் இருக்க வேண்டும் என்றால் அதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது' என்றான் ஸ்ரீகாந்த்.

''மகனே! புத்திசாலியான நீயா இப்படிப் பேசுகிறாய்?'' என்று மட்டும் கேட்டார். ''ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே என்பது பழமொழி. இப்படித்தான் பெண்கள் குடும்பத்தைக் குட்டிச்சுவராக்கி விடுகிறார்கள். பெண்களுக்கு அதிகமாக இடம் தரக் கூடாது'' என்றார்.

''எனக்குத் தெரியும். உங்கள் அறிவுரைக்கும் ஆசீர்வாதத்துக்கும் நன்றி. நான் ஒரு முட்டாள் இல்லை. உங்களுக்கு என்னைப் பற்றி நன்கு தெரியும். குடும்பத்தில் பிளவு ஏற்பட்டுச் சீரழிந்து போகாமல் இந்தக் கிராமத்தில் நான் பல குடும்பங்களைக் காப்பாற்றியிருக்கிறேன். ஆனால் இதை அனுமதிக்க முடியாது. ஒரு அப்பாவிப்பெண்ணை இந்தப் பாடு படுத்துவதைக் கண்டு நான் பேசாமல் இருந்தால் கடவுள் என்னை மன்னிக்க மாட்டார்'' என்றான் ஸ்ரீகாந்த்.

''லால் பஹாதூர் உன் தம்பி. அவன் தவறு செய்திருந்தால் காதை முறுக்கி நீ தட்டிக் கேட்கலாம். ஆனால்...''

''இனி அவன் எனக்குத் தம்பி இல்லை'' என்றான் ஸ்ரீகாந்த்.

''ஆம். பெண்டாட்டிக்காக (கூடப் பிறந்தவனை) தம்பி இல்லை என்கிறாய். அப்படித்தானே?''

''இல்லை. அவ்வாறில்லை. அவனது மிருகத்தனம்'' என்றான் ஸ்ரீகாந்த்.

சிறிது நேரம் இருவருமே மௌனிகளாகி விட்டனர். தாக்கூர் சாகிப் தனது மகனைச் சாந்தப்படுத்த விரும்பினார். ஆனால் லால் பஹாதூரையும் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. இந்தச் சமயம் பார்த்து ஏதோ ஒரு சாக்கில் கிராம மக்கள் பலர் அங்கு வந்தனர். தனது மனைவியின் பொருட்டு ஸ்ரீகாந்த் தனது தகப்பனாருடன் சண்டை போடுகிறான் என்ற செய்தி பல பெண்களுக்கு இனிக்கும் செய்தியாக இருந்தது.

எரிகிற வீட்டில் கிடைத்தது ஆதாயம் என நினைக்கும் இவர்களுக்குக் கிஞ்சித்தும் இடம் தந்துவிடக் கூடாது என்ற முடிவுக்கு வந்தார். திடீரென்று பேச்சை மாற்றினார். ''மகனே! நீ என்ன சொன்னாலும் சரி. உனக்குச் சரி என்று படுவதைச் செய். எனக்கு ஆட்சேபணை கிடையாது. உன் தம்பி செய்தது தப்புத்தான்'' என்றார்.

ஆத்திரத்தில் அறிவிழந்த அனுபவமில்லாத அந்த அலகாபாத் பட்டதாரிக்கு இந்த யோசனை எடுபடவில்லை. ''இந்த வீட்டில் இனிமேல் ஒரு நிமிடம் கூட லால் பஹாதூருடன் என்னால் இருக்க முடியாது'' என்றான்.

''மகனே! முட்டாள்களின் நடவடிக்கைகளுக்காக விவேகமுடையவர்கள் திடீர் முடிவுகளை மேற்கொள்ளக் கூடாது. அவன் விவேகமற்றவன். உன் தம்பி. நீ மூத்தவன். அவன் செய்கிற தவறுகளை மன்னித்து அவனைத் திருத்த வேண்டியது உன் கடமை'' என்றார் பேனி மாதவ்.

''எதை மன்னிப்பது? இதை என்னால் மறக்கவோ, மன்னிக்கவோ முடியாது. இந்த வீட்டில் அவன் இருக்க வேண்டும் அல்லது நான் இருக்க வேண்டும். அவன் உங்களுக்குச் செல்லப் பிள்ளை என்றால் இருக்கட்டும். என்னை வெளியேற்றிவிடுங்கள். என் பாட்டை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றான் ஸ்ரீகாந்த்.

வாசற்படியண்டை நின்று கொண்டு அண்ணன் பேசுவதனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்தான் லால் பஹாதூர் சிங். அவன் தன் அண்ணனை மிகவும் மதித்துப் போற்றி வந்தான். அண்ணனுக்கு எதிரே உட்கார மாட்டான். அவன் முன்னால் புகை பிடிக்க மாட்டான். வெற்றிலை கூடப் போட மாட்டான். சென்ற ஆண்டு நாகபஞ்சமி விழாவையொட்டி நடந்த மற்போரில், தன்னை எதிர்த்துப் போரிட்ட மல்லனை இரண்டு தடவை லால் பஹாதூர் கீழே உருட்டியதும், மகிழ்ச்சி பொங்க ஸ்ரீகாந்த் மேடையேறித் தம்பியை ஆலிங்கனம் செய்து வாழ்த்தினான். ஐந்து ரூபாய்க்கும் மேலான சில்லறைக்காக

கூட்டத்தில் வீசி எறிந்தான். இதற்கு மேல் பாசமும் நேசமும் கொண்டிருந்த அண்ணன் வாயிலிருந்து வந்த கடுமையான பதப் பிரயோகம் லால் பஹாரியை நிலைகுலையச் செய்துவிட்டது. ஸ்ரீகாந்த் அவனை அழைத்து வாய்க்கு வந்தபடி திட்டினாலும் ஏன் கன்னத்தில் அறைந்திருந்தால் கூட அவன் இவ்வளவு மன வருத்தம் அடைந்திருக்க மாட்டான். ஆனால் இப்பொழுதோ? லால் பஹாரிக்குத் தன் சகோதரனின் இந்தப் பேச்சு ஒப்பவில்லை. அண்ணனின் முகத்தைக் கூட அவன் பார்க்க விரும்பவில்லை. கண்களில் நீர் தாரை தாரையாக வடிய வீட்டுக்குள் சென்றான். நேராக ஆனந்தி இருக்கும் இடம் நோக்கி வந்தான்.

''அண்ணி! இந்த வீட்டில் இனி என்னோடு இருப்பதில்லை என அண்ணன் முடிவு செய்து விட்டார். என் முகத்தைக் கூட அவர் பார்க்க விரும்பவில்லை. எனவே நான் போகிறேன். இனி அவரை நான் பார்க்க மாட்டேன். நான் என்ன தவறு செய்திருந்தாலும் மறந்து மன்னித்து விடுங்கள்.''

லால் பஹாரியின் குரல் தழுதழுத்தது.

## 4

ஆனந்தியின் முன்னால் குனிந்த தலை நிமிராமல் லால் பஹாரி நின்று கொண்டிருந்த போது சோபம் சொந்தளிக்க ஸ்ரீகாந்த் அங்கு வந்தான். தம்பியைப் பார்த்த மாத்திரத்தில் அவனது நிழலைக் கூடப் பார்க்க விரும்பாமல் வேறு பக்கமாகத் திரும்பிச் சென்றான்.

கொழுந்தனைப் பற்றி ஆனந்தி புகார் மனுக் கொடுத்தது உண்மைதான். ஆனால்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

### எடை குறைய....

அமெரிக்காவில் எடையைக் குறைப்பதற்கு ரொம்ப முக்கியத்துவம் தருகிறார்கள். இப்பொழுது இதற்காக ஒரு புது விதமான ஐஸ் பெட்டி தயாரித்து விற்பனை செய்கிறார்கள். இந்த பிரிட்ஜின் கதவைத் திறந்ததும் அதிலிருந்து ஒரு குரல் கேட்கும்:

''மீண்டும் இனியா? நீ இப்படி குண்டாக இருப்பதில் ஆச்சரியமில்லை. கதவை மூடினால் உன் உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொண்டவனாவாய்!''

—டைம்ஸ் ஆப் இந்தியா
—பம்பாய் சந்திரசேகர்



இப்போது தன் கணவன் இந்த அளவுக்கு நிதானம் இழந்து போனமைக்காக அவள் எரிச்சலடைந்தாள்.

லால் பஹாரியைப் பார்த்ததும் அவன் 'நான் போகிறேன். என்னை மன்னியுங்கள்' எனக் கூறியதைக் கேட்டதும் அவள் தன் வசமிழந்தாள். அவன் மீது அவள் கொண்டிருந்த கொஞ்சநஞ்ச கோப தாபங்களும் பஞ்சாய்ப் பறந்தன. அவள் அழத் துவங்கினாள். உள்ளத்து இருள் அகற்றக் கண்ணீரைத் தவிர வேறு வழி ஏது?

''உங்கள் தம்பியை உள்ளே கூப்பிடுங்கள், எனது நாக்கு அழுகிப் போகட்டும். இனி ஒரு பொழுதும் சண்டைக்கு இழுக்க மாட்டேன்'' என்றாள்.

''நான் கூப்பிட மாட்டேன்'' என்றான் ஸ்ரீகாந்த்.

''பிறகு வருத்தப்படுவீர்கள். உங்கள் தம்பி மிகவும் வேதனைப் படுகிறார். எங்காவது போய்விடுவார்'' என்றாள் ஆனந்தி.

ஸ்ரீகாந்த் பேசவில்லை. குனிந்த தலை நிமிராதிருந்தார்.

''அண்ணி! அண்ணனுக்கு என் நமஸ்காரங்களைக் கூறுங்கள். அவர் என் முகத்தில் விழிக்க விரும்பவில்லை. எனவே நானும் அவரிடம் என் முகத்தைக் காட்டவில்லை'' என்றான் லால் பஹாரி.

இவ்வாறு கூறிய அவன்மறு கணம் வாசலை நோக்கி விரைந்தான். இதுவரை பொறுமையோடிருந்த ஆனந்தி ஆவேசம் பொங்க அவன் கையைப் பற்றினாள்.

''எங்கே போகிறாய்?''

''யாருமே என்னைப் பார்க்க முடியாத இடத்துக்கு.''

''உன்னை விட மாட்டேன்'' என்றாள் ஆனந்தி.

''உங்களோடு இருப்பதற்கு எனக்குத் தகுதி இல்லை'' என்றான் லால் பஹாரி.

''என்மீது உனக்குப் பற்றும் பாசமும் இருந்தால் ஒரு அடி கூட எடுத்து வைக்கக் கூடாது'' என்றாள் ஆனந்தி.

''அண்ணனுக்கு என்மீது எந்தவித மனத் தாங்கலும் இல்லை என்று தெரியாதவரை நான் இந்த வீட்டில் இருக்கப் போவதில்லை'' என்றான் லால் பஹாரி.

''கடவுள் சாட்சியாகச் சொல்லுகிறேன். எனக்குத் துளிகூட உன்மீது வருத்தம் இடையாது' என்றாள் ஆனந்தி.

இப்பொழுது ஸ்ரீகாந்தின் மனமும் இளகியது. வெளியில் வந்து இளவலை ஆரத் தழுவினான்.

நாத் தழுதழுக்க, ''தம்பி நடந்ததை மறந்துவிடு. இனி இதுபோன்றதொரு நிகழ்ச்சி நடக்காது. இது கடவுளின் விருப்பம்'' என்றான் ஸ்ரீகாந்த்.

பேனி மாதவ் சிங் வீட்டுக்குள் வந்தார். சகோதரர்கள் இருவரும் ஆரத் தழுவி நிற்கும் அந்த ஆனந்தக் காட்சியைக்கண்டு மெய் மறந்தார். ''பெரிய இடத்துப் பெண் பெரிய இடத்துப் பெண்தான். நிலைமை மோசமாகும்போது கை கொடுத்துக் காப்பது பெண் இனம்தான்'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினார்.




கொசுக்களை 'பேக் அப்' செய்து விரட்ட உதவுவது டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்




கொசுக்களை நடனமாடவைத்து விரட்டுகிறது




கொசுத் தொல்லையற்ற தூக்கத்தைப் பெற நித்ராதேவியை வேண்டத் தேவையில்லை: அதற்கு உதவுவது டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்



தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
:போர்ட், பம்பாய்-400 023. :போன்: 273831



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,**
**தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,**
**இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'**
**ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

# 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

❋ **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
❋ **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | I-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

*மாதாந்திர சுற்றுப் பயண விவரம்: ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்*

**பிரதம வைத்தியர் தங்குமிடங்கள் :**

சென்னை-600002, 1 முதல் 8ந் தேதி வரை: ராமச்சந்திரா லாட்ஜ், போன்: 846526, 6 அத்திப்பட்டன் தெரு, அண்ணுசாலை சமீபம், P ORR. & Sons – பெட்ரோல் பங்க் மேற்புறம் ரோடு. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.

சேலம் தலைமை அலுவலகம்: , 11, 16, 17 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.

திருச்சி: 9, 10 தேதி: அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. போன்: 25763, காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ், ராஜ வீதி, போன்: 33330.

பொள்ளாச்சி 14ந் தேதி: மாடர்ன் லாட்ஜ், தாலுகா ஆபீஸ் எதிர் சந்து, காலை 8 மணி முதல் 12 மணி வரை.

திருப்பூர் 14ந் தேதி: ராமகிருஷ்ணு லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணிவரை.

ஈரோடு 15ந் தேதி: ஆனந்த் லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

மதுரை 21, 22 தேதி: மணீஸ் கேப், (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை மணி முதல் இரவு 7 மணி வரை.

தூத்துக்குடி 23ந் தேதி: ராதா லாட்ஜ், ஜி. சி. ரோடு, காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.

திருநெல்வேலி: 23, 24ந் தேதி: நெல்லை லாட்ஜ். காலை 7 மணி முதல் இரவு 8 வரை.

மதுரை 26ந் தேதி: மணீஸ் கேப், டவுன் ஹால் ரோடு, போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.

திண்டுக்கல் 26ந் தேதி: ஆரியபவன் லாட்ஜ் பழனி ரோடு. மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை.

**உதவி வைத்தியர் தங்குமிடங்கள் :**

விழுப்புரம் 3ந் தேதி: வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு. காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கடலூர் என்.டி. 3ந் தேதி: ஹோட்டல் பிருந்தாவன். மாலை 3 மணி முதல் இரவு 8 மணி வரை.

சிதம்பரம் 4ந் தேதி: ஜெயராம் லாட்ஜ், (மேல வீதி) காலை 7 மணி முதல் பகல் 3 மணி வரை.

கும்பகோணம் 5ந் தேதி: தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தஞ்சாவூர் 6ந் தேதி: அசோகா லாட்ஜ், (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கம்பம் 21ந் தேதி: யூனிவர்சல் லாட்ஜ், காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

தேனி 21ந் தேதி: பாண்டியன் லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

விருதுநகர் 23ந் தேதி: ஹோட்டல் ஆஞ்சநேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.

இராஜபாளையம் 23ந் தேதி: அசோகா லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

நாகர்கோவில் 24ந் தேதி: உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு, காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

தென்காசி 25ந் தேதி: பார்வதி லாட்ஜ். காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கோவில்பட்டி: 25ந் தேதி சரஸ்வதி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

**தலைமை அலுவலகம் :**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**
*(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)*
**காந்தி ஸ்டேடியம் – சேலம்-636007**

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

—ராஜ்மோகன் காந்தி—

நேருவே மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று பட்டேல் கூறியபோதிலும் அவர் பின்வருமாறு சேர்த்துக் கொண்டார்:

''ஒரு தனி நபரை, அவர் யாராயிருந்தாலும் சரி, தேர்ந்தெடுத்து விட்டதனால் காங்கிரஸ் தனக்குள்ள ஏராளமான அதிகாரங்கள் அனைத்தையும் அவரிடமே துறந்து விட்டதாக ஆகாது... சமயம் வரும்போது காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பை ஏற்பது நல்லது என்று நான் காண்கிறேன். எனவே அப்போது எனக்கும் ஜவாஹர்லாலுக்கும் இடையில் கருத்து வேறுபாடு தீவிரமாக எழலாம்.''

ஆக, தாம் மறுபடி தேர்ந்தெடுக்கப்பட்டால் அது சோஷலிஸ சித்தாந்தத்தைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டதாகி விடாது என்று தெளிவாக்கிய நேரு, மூன்றாவது முறையாகக் கிரீடத்தைப் பெற்றார். இதற்கு முன் மூன்று முறை அக்கிராசனர் பதவி வகித்தவர் யாருமே இல்லை.

வேறு இடங்களிலும் சரித்திரம் உருவாகி வந்தது. திருவிதாங்கூரின் இளம் மகாராஜா, தமது திவான் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் வழிகாட்ட அரசின் பொறுப்பிலிருந்த எல்லாக் கோயில்களையும் ஓர் அறிக்கை மூலம் ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டிருந்தார்.

இந்த அரச அறிக்கைக்காக மகாராஜாவுக்கு நன்றி சொல்லத் திருவனந்தபுரத்தில் நடந்த கூட்டத்துக்கு ஸி. ஆர். தலைமை வகித்தார். அத்தருணத்தில் ஸி. ஆர். ''ஆலயப் பிரவேச இயக்கத்தின் சிற்பி'' என வர்ணிக்கப்பட்டார்.

அறிக்கை, ஸி. ஆரை நெகிழச் செய்திருந்தது. ''ஹிந்து மதம் புனிதப்படுத்தப்பட்டு விட்டது'' என்றார் அவர். மறுநாள் காலை நாற்பது ஹரிஜனச் சிறுவர்களுக்கு விபூதி வழங்கினார். புகழ் பெற்ற ஸ்ரீ பத்மநாப ஸ்வாமி கோவிலுக்கு அவர்களை அழைத்துச் சென்றார். ஆயிரம் ஆண்டுகளாக அந்தக் கோயில் தீண்டாதாரைக் கண்டதே யில்லை.

''ஆண்டவனுக்கு நன்றி சொல்வோம்'' என்றார் ஸி. ஆர். ''உங்கள் மகாராஜா நீடூழி வாழட்டும். என் வாழ்நாளிலேயே இது தான் மிகவும் சந்தோஷமான தருணம்.''

## 52. மீண்டும் வில்லேந்தினார்!

கிராமப்புறங்களில் காங்கிரஸுக்கு உள்ள தொடர்புகளைப் பலப்படுத்த வேண்டும் என்ற மகாத்மாவின் தீர்மானத்தை யொட்டி, காங்கிரஸின் வருடாந்தர மகாநாடு அந்த ஆண்டின் இறுதியில் மகாராஷ்டிர கிராமமான ஃபைஸ்பூரில் நடக்கவிருந்தது. ஸி. ஆர். அம்மகாநாட்டுக்குப் போவதாக இல்லை. இருப்பினும் நிகழ்ச்சிகள் மட்டுமின்றி நண்பர்களும் அவரைப் பின் துரத்தி வந்தனர்.

தமிழ் நாடு காங்கிரஸில் ஒற்றுமை நிலவவில்லை. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைமைப் பதவிக்குப் போட்டி யிருந்தது. ஸி. ஆர். அரசியலுக்குத் திரும்பி வரவேண்டும் என்ற கோரிக்கையை மேன்மேலும் பலர் எழுப்பி வந்தனர். சிலர் வெளிப்படையாகவும் சிலர் அந்தரங்கமாகவும் கூறி வந்தனர்.

காங்கிரஸ் சென்னையில் தேர்தல்களில் வெற்றி பெற்றால் — இது சாத்தியமென்றே தோன்றியது — அது பதவி ஏற்கவும் செய்தால் — இது நிச்சயமில்லை எனினும் நடக்கக் கூடியதே — அரசுக்கு யார் தலைமை வகிப்பார்கள்? சத்தியமூர்த்தி அப்பதவிக்கு ஒரு வேட்பாளர் தாம். ஆனால் அவர் தலைமை குறித்துக் குறை கூறப்பட்டு வந்தது. கட்சிக்குள் நடந்த தேர்தலில் முதலியார் அவரைத் தோற்கடித்திருந்தார். மேலும் ராஜதானியின் தெலுங்குப் பாதியில் இருந்த காங்கிரஸ்காரர்களுக்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்ற பிரகாசம் சத்தியமூர்த்திக்குக் கீழ் பணியாற்றுவாரா? 'மாட்டார்' என்பதே விடை எனத் தோன்றியது. கசப்புணர்வுகளைத் தோற்றுவிக்கக் கூடிய தீவிரமான போட்டி இருக்கும் என்றும் காங்கிரஸ் பிளவுபடுவதற்குரிய வாய்ப்பு இருப்பதாகவும் தோன்றியது.

இப்படி யெல்லாம் நேரலாம் என்ற எண்ணமே பட்டேலுக்குக் கவலை தந்தது என்பது தெளிவு. இதற்கெல்லாம் ஒரே பதில் ஸி. ஆர். தான் என அவர் கண்டார். ஆனால் ஸி. ஆர். தமது ஓய்வைத் துறந்து விட்டுச் சட்ட சபைத் தேர்தலுக்கு நிற்குமளவுக்குப் போவாரா? ''நீங்கள் பிடிவாதக்காரர் என்று எனக்குத் தெரியும்'' என்று ஓராண்டுக்கு முன்பாக பட்டேல் ஸி. ஆரிடம் கூறியிருந்தார். இருப்பினும் டிசம்பர் மத்தியில் ஒரு வாரம் தெற்கே வர இருந்த அவர் முயன்று பார்க்கத் தீர்மானித்தார்.

× ஸி.பி. ராமசாமி ஐயர்



முயற்சியில் இறங்கியது அவர் மட்டுமல்ல. தெற்கே இருந்த பல பொறுப்புள்ள மனிதர்கள் ஸி. ஆர். ஒருவரால் மட்டுமே ஒற்றுமையையும் விசுவாசத்தையும் உருவாக்க முடியும் என்று உணர்ந்தனர். எனவே அவரை வளைத்துப் போட முயற்சிகளை மேற்கொண்டனர். இவர்களில் ஹிந்து பத்திரிகை ஆசிரியர் கஸ்தூரி ஸ்ரீனிவாசன், லிபரல் கட்சித் தலைவர் டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி, முன்னாள் முதலமைச்சராக விளங்கி சமீபத்தில் காங்கிரஸில் சேர்ந்திருந்த பி. சுப்பராயன், ஆந்திராவைச் சேர்ந்த காளா வெங்கடராவ் ஆகியோர் சிலர்.

ஸி. ஆருடன் பேச விரும்புவதாகப் பட்டேல் முன்பே அவருக்குச் செய்தி அனுப்பியிருக்க வேண்டும். ஏனெனில் ஸி. ஆர். ரேணிகுண்டா ரயில் நிலையம் வரை காரில் சென்று அங்கு ரயிலேறி பட்டேலுடன் சேர்ந்து சென்னை வந்து சேர்ந்தார். பட்டேல் தாம் கூற வேண்டியதைச் சொன்னார். அதற்குச் சிறிது பலனும் இருந்தது. மறுநாள் சென்னையில் பட்டேல் பேசிய ஒரு கூட்டத்துக்கு ஸி. ஆர். வந்து சேர்ந்தார். மற்றவர்கள் காரியங்களைத் தொடர்ந்து செய்வார்கள் என்ற முழு நம்பிக்கையுடன்தான் தாம் ஓய்வு பெற்றதாக ஸி. ஆர். கூறினாலும் கவனத்தை ஈர்த்த சூக்குமமான சில வார்த்தைகளையும் சேர்த்துக் கொண்டார்:

''நான் ஓய்வு பெற்று விட்டேன் என்றாலும் திரும்பவும் தீவிரமாக உழைக்க வேண்டும் என்ற நிலைமையைக் காணும்போது வீட்டில் சும்மா உட்கார்ந்திருப்பேன் என்பது அதற்கு அர்த்தமல்ல.''

திருச்சியில் பட்டேல் நகர காங்கிரஸ்காரர்களிடம் சொன்னார்: ''அவர் ராஜினாமா செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தை நீங்கள் பிடிவாதமாக உருவாக்கியிருக்கவில்லையானால் காங்கிரஸின் அக்கிராசனராக ராஜகோபாலாச்சாரி வெகு காலம் முன்னரே ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பார்.''

இவ்வாறு கண்டித்த பிறகு பட்டேல் காங்கிரஸ் மகாநாட்டில் கலந்துகொள்ள ஃபைஸ்பூர் சென்றார். ஸி. ஆர். கீதைக்குத் திரும்பினார். டிசம்பர் 24ந் தேதி சென்னைக் கூட்டம் ஒன்றில் அவர் கீதை சொற்பொழிவு நிகழ்த்தினார். ஆண்டு முடிவுற்றது: ஆயின் பட்டேலும் அவர் நண்பர்களும் சென்னையில் கேட்டுக் கொண்டவற்றுக்கு இன்னும் பதில் கிடைக்கவில்லை.

திருவிதாங்கூர் ஹரிஜனங்கள், ஆலயப் பிரவேசத்துக்கு அனுமதி அளித்த மன்னரின் அறிக்கையால் மகிழ்வுற்று மகாத்மாவை அழைத்திருந்தார்கள். அதை ஏற்றுச் சென்ற அவர், வழியில் சென்னையில் ஜனவரி 11ம் தேதி ரயில் மாறுவதற்காகத் தங்கினார். அவர் வந்ததும் ஸி. ஆர். அவரைச் சந்தித்தார். ''நான் வற்புறுத்தலுக்கு ஆளாகி வருகிறேன்'' என்று காந்தியிடம் சொன்னார். மகாத்மா பதில் ஏதும் கூறவில்லை — அது ஸி. ஆரின் முடிவாகவே இருக்க வேண்டும் என்பதால்.

ஜனவரி 15ந் தேதி ஸி. ஆர். முடிவெடுத்தார். ''ஸி ராஜகோபாலாச்சாரி தேர்தலில் போட்டியிடுவார் என அறிகிறோம்'' என்று மறுநாள் ஹிந்து பத்திரிகை கூறியது. ''இந்த ராஜதானியிலும் சரி, அதற்கு வெளியிலும் சரி காங்கிரஸ் தலைவர்கள் அவர் ஓய்விலிருந்து திரும்பி—வரவேண்டும் என்று நீண்ட காலமாக வற்புறுத்தி வந்திருக்கிறார்கள்.''

''சர்வகலாசாலைத் தொகுதியில் ஸி. ஆர். நிற்க வேண்டும் என்று சத்தியமூர்த்தி வற்புறுத்தி வெற்றி கண்டிருக்கிறார்; அந்த ஸ்தானத்தை ஸி. ஆருக்குத் தாமே விட்டுக் கொடுத்துமிருக்கிறார்'' என்று பம்பாயிலிருந்து பட்டேல் அறிவித்தார். தம்நிகரற்ற தலைவர் வழிகாட்ட, காங்கிரஸ் சக்திகள் அனைத்தும் ஒன்று கூடும் என்று தாம் நம்புவதாகவும் பட்டேல் சேர்த்துக் கொண்டார்.

மத்திய சட்டமன்ற காங்கிரஸ் கட்சியில் காரியதரிசியாக விளங்கிய சத்தியமூர்த்தி, அங்கே பயனுள்ள விதமாகச் செயலாற்றியிருந்தார். சென்னை சட்ட சபையிலும் அரசிலும் பெரிய பொறுப்புக்களை எதிர்பார்த்துக் கொண்டுமிருந்தார். இப்போது அவர் தியாகம் புரிந்திருந்தார். அது சுலபமான ஒன்றல்ல.

ஸி. ஆருக்கும் ஒரு முடிவுக்கு வருவது சுலபமாக இருக்கவில்லை. நிலைமை அவர் செயலை நியாயப்படுத்தலாம். அவர் திரும்பி வந்தே ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அவர் சமீபத்தில்தான் ஓய்வு பெறுவது பற்றித் தீர்மானமாகப் பேசியிருந்தார். எனவே சில தினங்கள் வரை அவர் சிறிதளவு தர்மசங்கடப்பட்டுக் கொண்டிருந்தார்.

''எனது திடீர் வீழ்ச்சி பற்றிக் கண்டனம் செய்து உன்னிடமிருந்து கடிதம் ஏதும் வராதது குறித்து நான் மகிழ்கிறேன்'' என்று அவர் தேவதாஸுக்கு எழுதினார். ''நான் இந்த நிலைக்கு அவசரம் அவசரமாகத் தள்ளப்பட்டிருக்கிறேன். எல்லாத் தேர்தல்களிலும் வென்று காட்ட எனக்கு நான்கு வார அவகாசமே இருக்கிறது.''

(தொடரும்)

**தமிழாக்கம்: வி. ராஜேந்திரன்**

---

காதலி : நமக்குக் கல்யாணம் ஆனவுடன் என் வேலையை விட்டு விடவா...?

காதலன் : உனக்கு எவ்வளவு சம்பளம்...?

காதலி : எண்ணூறு ரூபாய்...

காதலன் : அப்படியா... நீ வேலை பார்! நான் விட்டு விடுகிறேன்...!

- ராஜேஸ்வரி



மியூசிக் அகாடமி திரை கீழே விழுந்தபோது, அதுவரை அமைதியாய் இருந்த ஆடியன்ஸ் கூட்டம் பலமாய்க் கைதட்டியது. கௌரி மேடையை விட்டுக் கீழே இறங்காமல் பணிவான கைகூப்பலுடன் தன் 'குளோஸ்-அப்' பற்களைக் காட்டிச் சிரித்தாள். அவளை நலுங்காமல் காருக்குக் கூட்டிப் போகக் காத்திருந்தான் ஸ்ரீநாத்.

அவசரம் அவசரமாகத் தன் பிளிமௌத்தில் ஏறியபோது....

''டிங் டிங்....'' என்று அலறியது அலாரம் கடிகாரம்.

கௌரி சட்டென்று கண் விழித்தாள். கை தானாகக் கடிகாரத்தின் வாயை அடக்கியது.. 'இன்னும் ஐந்தே நிமிடங்கள்...'

கேட்க வேண்டுமானாலும் அவனுக்கு நேரமிருக்கலாம். ஆனால் வீட்டு வேலை என்று வரும்போது, 'நிறைய ஹோம் ஒர்க் இருக்கு மன்னி' என்று மாடிக்குப் போய்விடுவான்.

ஏற்கலவே இரண்டு நாட்களாய்ப் பள்ளிக்கு லேட்டாகப் போகிறாள். இன்றைக் காவது நேரத்துக்குப் போகாவிட்டால், ஹெட்மிஸ்ட்ரஸ் அறைக்கு வரும்படி உத்தரவு வந்துவிடும்.

கௌரி அவசரமாய்த் தேங்காயைத் துருவ ஆரம்பித்தாள்.

''கூட்டுக்குக் கொஞ்சம் தேங்காய் அரைச்சுக் கொடேன்'' என்று வத்சலாவைக் கேட்க முடியுமா? வீட்டுக்கு ஒரே செல்லப் பெண்! பள்ளி இறுதியாண்டில் படிக்கும் அவளுக்குச்

# மோஜே ஆக்டிங்

என்று கண்ணை மூடியபோது அந்தக் கனவு மறுபடியும் மனத்தில் எழுந்தது.

கனவுகள்.... ஆம்! இவையெல்லாம் இரவில் — தூக்கத்தில் கனவுகள்! பகலில் விளையும் மனத் தாபங்கள் மட்டுமே!

அவசரமாய்ப் படுக்கையை விட்டு எழுந்தாள் கௌரி. ''தலைக்கு மேல் வேலை இருக்கிறது. பள்ளிக்கூடம் போவதற்கு முன்னால்''

அவள் சமையல் அறைக்குள் நுழைந்தாள்.

வேறு ஒருவரும் இன்னும் எழுந்திருக்கவில்லை.

காப்பி டிகாக்ஷனைப் போட்டுவிட்டுக் குளிக்கப் போனவள் திரும்பி வந்து, பாலை அடுப்பில் வைக்கும்போதுதான் முதல் காப்பிக்குச் சந்துரு எழுந்து வந்தான். பின்னர் அவளுடைய மாமியார், ஸ்ரீநாத், வத்ஸலா என்று ஒருவர் பின் ஒருவராய் எழுந்து வர ஆரம்பித்தனர்.

அவர்களுக்கெல்லாம் காப்பியைக் கலந்து கொடுத்துவிட்டு, மாமியார் குளிக்க உதவி செய்து, சமையலை ஆரம்பித்து... ஒவ்வொன்றாய் அவளாகச் செய்து வந்தபோது 'யாருமே உதவிக்கு வருவதில்லையே' என்று அவளால் ஆதங்கப்படாமல் இருக்க முடியவில்லை.

கண்கள் இரண்டும் தெரியாத மாமியாருக்கு வாய் மட்டும் நீளம்தான். எதையாவது தொண தொணத்துக் கொண்டு, செய்யும் அல்லது செய்யாத காரியங்களுக்கு 'நொட்டை'ச் சொல்லிக் கொண்டிருப்பாள். கணவர் ஸ்ரீநாத்தோ பேப்பரை எடுத்து வைத்துக்கொண்டால், குளித்துச் சாப்பிட்டுவிட்டு ஆபீஸுக்குப் போகத்தான் மாடியை விட்டுக் கீழே இறங்குவான். இளம் மச்சினன் சந்துருவை வேலை வாங்க முடியுமா? கிரிக்கெட் விளையாடுவதிலும், மேட்ச் காமெண்டரி

சுண்டு விரலை அசைக்கக் கூடத் தெரியாது என்று சொல்லிக் கொள்வதில் மாமியாருக்குத்தான் எவ்வளவு பெருமை! அதே கௌரி அப்படி இருந்தால், 'நன்னாத்தான் பெண்ணை வளர்த்திருக்கா' என்று அவளுடைய அம்மாவுக்கு அர்ச்சனை விழாதா?

அம்மியில் தேங்காயை அரைத்து, கொத்தவரங்காய்க் கூட்டில் சேர்த்து அடுப்பில் வைத்தாள். ஸ்ரீநாத்தின் ஷர்ட்டுகளைச் சலவையிலிருந்து வாங்கிக் கூடத்தில் டேபிளின் மீது வைத்தாள். குழந்தை ரவியைக் குளிப்பாட்டித் தலையை வாரி விடும்போது என்றுமில்லாமல் அவன் சுரத்தில்லாமல் இருப்பது போல் தோன்றியது.

அவனுக்குச் சாதத்தைப் போட்டுப் பள்ளிக்கூட ரிக்ஷாவில் ஏற்றி விட்டாள். அதன் பின் ஸ்ரீநாத், சந்துரு, வத்சலா எல்லோருக்கும் பரிமாறிவிட்டுத் தானும் ஒரு வாய் அள்ளிப் போட்டுக் கொண்டபோது அவளுக்கே தன் சமையல் பிடிக்கவில்லை.

'நிச்சயம் இன்னிக்கு மாமியாரிடம் வாங்கிக் கட்டிக் கொள்ளப் போகிறேன்' என்று நினைத்துக் கொண்டவள், கூட்டில் இன்னும் கொஞ்சம் உப்பைச் சேர்த்து 'அட்ஜஸ்ட்' செய்தாள்.

சட்டென்று புடவையை மாற்றிக் கொண்டு தன் டிபன் பாக்ஸைப் பையில் எடுத்து வைத்துக் கொண்டாள் கௌரி.

மாமியாருக்குப் பழக்கமான இடத்தில் மத்தியானத்துக்கு வேண்டியவற்றை எடுத்து வைத்தாள்.

''உப்புமாவும், பிளாஸ்கில் காப்பியும் வச்சிருக்கேன், மா! சாயந்திரம் இன்னிக்கு பஜனை இருக்கு. அதனாலே கொஞ்சம் நாழியாகும்..'' என்று விழுங்கியபடி சொன்னவள் வாசற்படியைத் தாண்டி வந்தாள்.

கல்யாணம் ஆவதற்கு முன் அவளுக்கென்று எத்தனையோ கனவுகள்! கௌரி பள்ளிக்கூடத்திலும், கல்லூரியிலும் சங்கீதம் படித்தாள். பெரிய பாடகியாய் வர வேண்டும் என்று எத்தனை சாதகம்? அவையெல்லாம் இப்போது குடும்பத்தில் 'அடிஷனல் ஸாலரி'க்குப் பள்ளிக்கூட மாணவிகளுக்குப் போதிப்பதற்கு உதவுகின்றன. விருப்பம் உள்ள மாணவிகள் வெகு சிலர்தான்! இருந்தாலும் வீட்டுச் சூழ்நிலையை விட்டு, அந்நியமான மனிதர்களைத் தினம் பார்ப்பதே மனத்திற்கு உற்சாகமாக இருக்கிறது. வீட்டில் இத்தனை பொறுப்புக்கள் இல்லாவிட்டால் இன்னும் நன்றாயிருக்கும். அடுத்த மாதம் 'கமீத்' வாங்க வேண்டும். இந்த இருபதாம் நூற்றாண்டில் இவ்வளவு வசதிகள் வந்தும் ஏன் இப்படி மல்லாட வேண்டும்? ஆனால் முடியுமா? மாமியார் விடுவாளா?

அவள் அவசரம் அவசரமாய் நடையை எட்டிப் போட்டு நடந்தும் பள்ளிக்கூடத்திற்குள் நுழையும்போது மணி அடித்துக்கொண்டிருந்தது.

ஸ்டாஃப் ரூமில் தன் பையை வைத்து விட்டுப் பிரார்த்தனைக்குத் தன் இடத்தில்



வந்து நிற்கும்போது அவளுக்கு 'அப்பாடா' என்றிருந்தது.

'இன்றைக்கு நேரத்துக்கு வந்து விட்டேன்' என்ற பெருமித பாவனை தானாகவே அவள் முகத்தில் தோன்றியது.

பிரார்த்தனை முடிந்தபோது பியூன் அவள் அருகே வந்தான்.

''ஹெட்மிஸ்ட்ரஸ் அம்மா கூப்பிடறாங்க, டீச்சர்'' என்றான். அவனுக்கும் அவள் டீச்சரா என்ன?—கௌரிக்குச் சிரிப்பு வந்தது.

ஹெட்மிஸ்ட்ரஸ் அவளுக்காகத்தன் அறையில் காத்திருந்தாள். லேசாப் பூசிய உடம்பு. திருமணமாகாமல் ரொம்ப வருடங்களாக இந்தப் பள்ளிக் கூடத்துக்காக உழைத்திருக்கிறாள் மிஸ் பத்மாவதி.

''குட் மார்னிங், மேடம்.'' — கௌரி சற்றே அச்சத்துடன் சொன்னாள்.

''உங்க ஸன்னோட பள்ளிக்கூடத்திலிருந்து டெலிபோன் வந்திருக்கு; உங்க பையனுக்கு நல்ல ஜுரமாம். வந்து கூட்டிக்கிட்டுப் போகச் சொன்னாங்க'' — அவள் சொல்லும் போதே, 'ஏன் உன் வீட்டு விஷயங்களை இண்டர்ஃபியர் பண்ண விடுகிறாய்?'' என்பது போல் இருந்தது ஹெட்மிஸ்ட்ரஸின் பார்வை.

''ஐ ஆம் ஸாரி மேடம்! ஐ வில் பீ பேக் ஸூன்'' — கௌரி வெளியே வந்தாள்.

ஹேண்ட் பேக்கை மட்டும் எடுத்துக் கொண்டு பள்ளிக்கூடத்துக்கு வெளியே வந்த போது சூரியன் அதிகமாகச் சுட்டுக் கொண்டிருந்தான். பள்ளிக்கூடம் அவள் பின்னால் மிக அமைதியாக இருந்தது. ரவியின் நர்ஸரிக்கு இங்கிருந்து பஸ்கூடக் கிடையாது. ஒன்றரை மைலாவது நடக்க வேண்டும். ரிக்ஷாவையாவது கூப்பிடலாமென்றால் மர நிழலில் வழக்கமாய் ஒதுங்கியிருக்கும் ரிக்ஷாக்கள் பள்ளி நேரமாதலால் வேறிடத்துக்குப் போயிருந்தன.

அவள் மனம் படபடத்தது. ''காலையிலேயே உடம்பு லேசாய்ச் சுட்டது போலிருந்ததே! குழந்தையைச் சரியாகக் கவனிக்கக் கூட முடியாமல் என்ன வேலை வேண்டியிருக்கிறது?'' — அவளுக்கு வேர்த்துக் கொட்டியது. நைலான் புடவையில் காற்றுப் புக முடியாமல், கால்களில் மாட்டியது.

ரவி ஒரு மேஜையின் மேல் படுத்திருந்தான். அவனைப் பார்க்கவே கௌரிக்குப் பாவமாய் இருந்தது.

''நேற்று தூங்குவதற்கு முன்னால் காது வலிக்கிறது என்றானே? ஒருவேளை இயர் இன்ஃபெக்ஷனாய் இருக்குமோ? — ரவியின் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள். அனலாய்க் கொதித்தது.

''டாக்டர் கிட்டே கூட்டிக்கிட்டுப் போங்கம்மா!'' — ரவியின் அருகே நின்றிருந்த ஆயா 'அட்வைஸ்' பண்ணினாள்.

''ஒரு ரிக்ஷா பார்த்துக்கிட்டு வரவா?'' என்று அவள் கேட்டபோது நன்றியுடன் ஒரு ரூபாயை ஆயாவிடம் நீட்டினாள் கௌரி.

''சாப்பிடப் போகணும்மா'' — ரிக்ஷாக்காரன் முணு முணுத்தாலும் பொறுமையாய், அவளையும் ரவியையும் ஒவ்வொரு கிளினிக்காய் அழைத்துச் சென்றான்.

''பள்ளிக்கூடத்திலிருந்து ஸ்ரீநாத்தைக் கூப்பிட மாட்டார்கள். ஏனென்றால் அவன் ரவியின் அப்பா. உடம்பு சரியில்லாவிடில் அம்மாதான் வரவேண்டும். ஏனென்றால் தாய்மை மிக உயர்ந்தது...'' — கௌரி மனத்துக்குள் சிரித்துக் கொண்டாள்.

''தாய்மை!'' — புல்ஷிட்! நாள் முழுதும் வீட்டை மட்டும் கவனித்துக் கொண்டு, சமைத்துக் கொண்டு குழந்தைகளை வளர்ப்பதை மட்டும் கடமையாகக் கொண்ட பெண்களுக்குத்தான் அதெல்லாம்.

வீட்டில் உள்ள மனிதர்களுக்குப் பதில் சொல்ல வேண்டும். வெளியே வந்தும் வேலை செய்ய வேண்டும். எல்லோரிடமும் இன்முகமாய்ப் புன்னகைத்துக் கொண்டு இருக்கவேண்டும், பணமும் கொண்டுவர வேண்டும்... கௌரிக்கு வெறுப்பாய் இருந்தது.

'இப்படி நினைப்பது தவறு' என்று மனத்தில் தோன்றியதற்குப் பரிகாரமாக ரவியை லேசாய் அணைத்து அவன் நெற்றியில் முத்தமிட்டாள்.

ஒரு வழியாய் டாக்டரிடம் மருந்து வாங்கிக் கொண்டு வீட்டுக்குள் வரும்போது மணி ஒன்றாகி விட்டது.

'ஹெட்மிஸ்ட்ரஸுக்குப் ஃபோன் பண்ணியாவது விஷயத்தைச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் நாளைக்கு எல்லா டீச்சர்கள் முன்னாலும் சட்டென்று ஏதாவது சொல்லி முகம் சிவக்க வைத்து விடுவாள்' — ரவியை மாமியாரிடம் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு முனைக் கடையில் ஃபோன் பண்ணிச் சொல்லிவிட்டு வந்தாள்.

''இனிமேல் இப்படி லீவு எடுக்கக் கூடாது'' —ஹெட்மிஸ்ட்ரஸ் சொன்ன வார்த்தைகள் அவளுக்குப் பிடிக்கவில்லை. திருமணமாகாமல் —தாயாகாமல் இருக்கும் அவளால் சுலபமாகச் சொல்ல முடிந்து விட்டது. குழந்தை என்றால் உடம்புக்கு வராதா?

மாமியார் தனக்குள்ளாகவே முணு முணுத்துக் கொண்டிருந்தாள்.

தமிழ்நாடு அரசு சைக்கிளில் டபிள்ஸ் போகலாம் என்று அறிவித்தாலும் அறிவித்தது. இப்போது வாடகை சைக்கிள் நிலையங்களில் சைக்கிள்களில் 'கேரியரே' வைப்பதில்லை. ஏதேனும் சாமான் வாங்கி எடுத்து வரச் சங்கடமாக இருக்கிறது.

- ராமசாமி



# கல்கி-சாரதா'ஸ்

## பட்டுப்புடவைகள் பரிசுத்திட்டம்



இந்த வாரத்திய கேள்வியும் விடைகளும்:

**கேள்வி :**

**காரிய சாதனைக்குப் பெண்ணின் பலம் என்ன?**

**விடைகள் :**



**சிரிப்பு**
**பேச்சு**
**கண்ணீர்**

''எங்க காலத்திலே இப்படியா? நாங் கள்ளாம் குழந்தைகளை வளர்க்கலையா? ஒரு பிள்ளையை நோய் நொடி இல்லாமல் வைத்துக்கொள்ளத் தெரியவில்லே!''

கௌரி வாயை மூடிக் கொண்டு மாடிக்குப் போனாள்.

''அம்மா... எங்கேயும் போகாதேம்மா!'' என்று ஏக்கமாய் ரவி அவள் கையைப் பிடித்துக்கொண்டபோது அவள் கண்களில் தாய்மையின் சாரமாய் நீர் நிரம்பியது.

அவனுக்கு மருந்தைக் கொடுத்து அருகிலேயே உட்கார்ந்து கொண்டாள். அவனுக்கென்று வாங்கியிருந்த கதைகளைப் படித்தபோது அவள் கையைப் பிடித்துக்கொண்டே, ரவி உறங்கிப் போனான்.

அவள் கீழே இறங்கி வந்தாள். ''இன்னும் இன்றைய யாகம் முடியவில்லையே!'' என்று நினைத்துக் கொண்டபடி டிபனுக்குத் தயார் செய்ய ஆரம்பித்தாள்.

''இன்னிக்குப் பொங்கலா?'' — உள்ளே முதலில் நுழைந்தது சந்துருதான்.

ஸ்ரீநாத மாலையில் நேரம் கழித்துத்தான் வந்தான். சமையலறையில் கிடைத்த தனிமையில் அவள் கைகளில் அடர்த்தியாகத் தொடுத்த மல்லிகைப் பூவைக் கொடுத்தான். அவன் கண்களில் அன்றிரவுக்கான பட்டியல் தெரிந்தது.

அவள் பூவைத் தலையில் வைத்துக் கொள்ளவில்லை. கொஞ்சம் அதில் கிள்ளி வத்சலாவிடம் கொடுத்தாள். மற்றதைச் சுவாமி படத்துக்குச் சாத்தினாள்.

இரவு பதினொரு மணி வரையில் சமையல் வேலையும், நடுவே ரவியைப் பார்த்துக்கொள்வதுமாகச் சரியாய் இருந்தது.

இரண்டு நாட்களுக்கு முன் அவள் பள்ளிக்கூடத்தில் நடந்த விழாவில் துறுதுறுப்பான மாணவி சியாமளா 'மோனோ ஆக்டிங்' செய்தாள். இரண்டு குழந்தைகள் சண்டை போடுவது போலவும், அம்மா வந்து சமாதானப்படுத்துவது போலவும் அவள் மட்டும் ஒருத்தியாக மூன்று பாத்திரங்களில் நடித்து அப்ளாஸ் வாங்கிக் கொண்டு போனாள்.

கௌரியின் வாழ்க்கையும் மோனோ ஆக்டிங்தானோ? மாமியாருக்கு மருமகள்; ஸ்ரீநாத்தின் மனைவி; வத்சலா, சந்துருவுக்கு மன்னி. ரவிக்கு அம்மா. பள்ளியில் மாணவிகளுக்கு டீச்சர்; சமையல்காரி — எல்லாப் பாத்திரங்களிலும் அவளே மாறி மாறி நடிக்க வேண்டியிருக்கிறது. அதுவும் நிறம்படச் செய்யாவிட்டால் அவளால் நிம்மதியாய் இருக்க முடியாது.

உயர்ந்த லட்சியங்கள், கனவுகளில் மட்டும் தான்! 'இப்படிக் குடும்ப வாழ்க்கையில் உழலும்போது நான் நானாய் ஏன் இருக்க முடியவில்லை? எனக்கென்று நேரத்தைச் செலவழித்தால் ஏன் 'ஸெல்ஃபிஷ்' என்ற பட்டம் கிடைக்கிறது?' — பொங்கிய கண்ணீரைக் கௌரி அடக்கிக் கொண்டாள்.

சமையல் அறையைச் சுத்தம் செய்து விட்டு விளக்கை அணைத்துக் கதவைத் தாளிட்டாள். வீட்டில் மற்ற எல்லோரும் படுக்கப் போய் விட்டார்கள். எப்போதும் கடைசியாய்ப் படுக்கைக்குச் செல்வதும் அவள்தான். முதலில் எழுந்திருப்பதும் அவள்தான்.

சுவாமி படத்தின் மேல் இருந்த பூவைத் தலையில் வைத்துக் கொண்டாள். 'மனைவி' பாத்திரம் ஏற்கத் தன்னைத் தயார் செய்து கொண்டதாய் நினைத்தபோது கௌரிக்குப் பெருமூச்சுத்தான் வந்தது. இவளைப் போல் தற்போதைய சமுதாயத்தில் எத்தனை கௌரிகள்?

அவள் மெதுவாய் மாடிப் படி ஏறினாள்.



# பொறியைத் தட்டியதுமே...







காம்ப்டாலக்ஸ் ஸ்பாட்லைட்
துணிகளின் டிஸைன்களைத் தனித்
தொனிக்கச் செய்கிறது—பார்ப்பவ-
ரைக் கவர்ந்திழுக்கும் வகையிலே.

உங்கள் வைரங்களிலே
மேலும் அதிக ஜொலிப்பு—
காம்ப்டாலக்ஸ்
ஸ்பாட்லைட் மூலம்.



PE-.-4365




காம்ப்டாலக்ஸ், எடுத்துப் பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ இணைப்புகளோ தேவையில்லை. பொருத்துங்களேன், பொறியைத் தட்டியதும், அதன் விற்கும் திறனை அறியலாமே!




# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

**பிலிப்ஸ்**









⌘ க. குமரேசன், திருவாரூர்

கே. ஆங்கிலப் பொழிவில் ராஜாஜி - சர்வ பள்ளி ராதாகிருஷ்ணன் எப்படி?

ப: இருவருடைய பேச்சும் சுவையானவை. ராஜாஜி சபையினருக்குத் தகுந்த மாதிரி தன் பேச்சை அமைப்பார். சர்வபள்ளி ராதாகிருஷ்ணன் அவரது இலக்கியத் தரமான பாணியை மாற்ற மாட்டார். ராதாகிருஷ்ணனின் பேச்சை வசன இசை (வசன கவிதை போல்) என்று கூறலாம். கம்பீரம் என்ற வார்த்தைக்கு விளக்கம் கிருஷ்ணனின் உரை என்றால் எளிமைக்கு எடுத்துக்காட்டு 'கோபாலன்'னின் உரை!

⌘ ஏ. சுப்பிரமணியன், காரைக்குறிச்சி

கே. சிவாஜி கணேசனின் சுயசரிதை வரப் போகிற தாமே. கல்கியில், நடிகர் உசிலை மணியின் சுயசரிதையைப் போட்டால் என்ன?

ப: போட்டால் தவறில்லை. உங்கள் கேள்வியில் உள்ள கிண்டல் எனக்குப் பிடிக்கவில்லை. ஒவ்வொரு மனிதனும் பலசுவையான அனுபவங்கள், உணர்வுகள், கொண்டவன். உசிலை மணி ஒரு நகைச்சுவை நடிகர் என்பதால் குறைந்து போய்விட்டாரா? மனிதனை அவன் செய்யும் தொழில், அவனது செல்வம், உருவம், செல்வாக்கு இவைகளைக் கொண்டு எடை போடாதீர்கள். 'மனிதனை மனிதனாகப் பார்ப்போம். பண மூட்டையாகவோ, அதிகாரமலையாகவோ, புகழ் கோபுரமாகவோ பார்க்க வேண்டாம்.

⌘ பி. எஸ். ஸ்ரீநாத், திருச்சி-16

கே. எத்தனையோ பேருடைய கேள்விகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். யாருடைய கையெழுத்து உங்களைப் பொறுத்தவரை நன்றாக உள்ளது?

ப: மிகவும் எளிதாகப் பதில் சொல்லிவிடுவேன். கெங்கவல்லி வி. முருகவேளின் கையெழுத்துத்தான் முதல் மார்க் பெறும்.

⌘ ஆர். எஸ். வாசன், பம்பாய்-69

கே. டெலிவிஷனால் மாணவர்களுக்கு நன்மையா தீமையா?

ப: தீயினால் நன்மையா ஆபத்தா என்கிற மாதிரி இருக்கிறது உங்கள் கேள்வி. பயனுள்ள விஷயங்களைப் பார்க்காமல் சினிமாவையே பார்த்துக் கொண்டிருந்தால் டி.வி.யால் தீமைதான்.

⌘ சக்தி குணசேகரன், வேலூர்

கே. அரசியல், காதல், சினிமா - இவை ஒவ்வொன்றிலும் தங்கள் பங்கு என்ன?

ப: பங்குகொள்ள ஆசைதான். வாய்ப்புத்தான் கிடைக்க மாட்டேன் என்கிறதே! குறைந்தபட்சம் இரண்டாவதிலாவது சான்ஸ் கிடைக்கக் கூடாதா? ரொம்ப அதிர்ஷ்டக்கட்டை!

⌘ ராஜீராமநாதன், சென்னை-90

கே. எதைக் கண்டு வருந்தினீர்கள்?

ப: வருத்தப்பட்ட நேரங்கள் எத்தனை எத்தனையோ. ஆனால் இந்தக் கேள்விக்குப் பதில் எழுதும்போது வருத்தப்பட்டது ஒரு எம். காம் பட்டதாரியின் கேள்வியைப் பார்த்து. இவர் ஆங்கிலத்தில் எனக்கு எழுதியிருக்கிறார். ஒரே தப்புகள். எங்கேயோ போய்க் கொண்டிருக்கிறது நமது கல்வியின் தரம்!

⌘ ஆர். லலிதா, திருநெல்வேலி-6

கே. பிரியமான ஒருவர், பிரியமான புத்தகத்தைத் 'திருப்பித் தருவேன்' என்று கூறி வாங்கிப் போனார். ஆனால் கொடுக்கவில்லை. என்ன தண்டனை கொடுக்கலாம்?

ப: அவர்மீதுள்ள பிரியத்தைத் திருப்பிக் கொடுத்துப் புத்தி புகட்டுங்கள்.

⌘ வி. முத்துகிருஷ்ணன், பத்தமடை

கே. சினிமாவுக்கு ஏற்ற ஒரு கவர்ச்சிகரமான தலைப்பு சொல்லுங்கள்

ப: முன்பு பெண்ணைச் சுற்றித் தலைப்புகள் இருந்தன. ''மயங்குகிறாள் ஒரு மாது'வின் வெற்றிக்குப் பிறகு, இப்போது பூக்கள் சீஸன். அதனால் பூக்கள் என்று வரும் எந்தப் பெயருக்கும் வரவேற்பு இருக்கும்.

⌘ சுப்புரத்தினம், ராஜபாளையம்

கே. தங்களுக்குப் பிடித்தமான சாக்ரடீஸின் பொன்மொழி ஒன்று கூறுங்கள்.

ப: வேலை செய்யாமல் இருப்பவன் மட்டும் சோம்பேறி அல்ல. தன்னுடைய திறமைக்கும் சக்திக்கும் குறைவான வேலையைச் செய்து கொண்டிருப்பவனும் சோம்பேறி. (சாக்ரடீஸ்)

ரூ. 5 பரிசு பெறுபவர்:

**ஆர். எஸ். வாசன், ராதிகா நிவாஸ்**
**36, III மாடி, எம். வி. ரோடு,**
**கிழக்கு அந்தேரி, பம்பாய்-69**



# எப்படி வாழ்ந்தால் என்ன!

எம்.கே.சங்கரன்

மின்வெட்டும் நேரத்தில் அவனுக்கு ஒரு யோசனை.

''பார்வதி, ஒரு லாரி வருது. அதைப் பிடிச்சு டவுனுக்குப் போய்விடலாமா? நாம் நடந்து போய் ரயிலைப் பிடிக்கிறது கஷ்டம்.''

அவள் ''சரி'' என்றாள்.

குமார் லாரியை நிறுத்தக் கைகளை உயர்த்திக்காட்டினான். சடன்பிரேக். ரோட்டைத் தேய்த்துக்கொண்டு லாரி நின்றது.

ஹெட் லைட் வெளிச்சத்தில் இருவரையும் ஏற இறங்கப் பார்த்தான் லாரி டிரைவர்.

''நாங்க அவசரமா டவுனுக்குப் போகணும். கார் சார்ஜ் தந்துடறோம்.'' குமார் கெஞ்சலுடன் கேட்டான்.

''ஏறுங்க' என்றான் டிரைவர்.

குமார் டயரை மிதித்துத் தொற்றி ஏறிக்கொண்டான். பார்வதி ஏறச் சங்கடப்பட்டாள். டிரைவர் வந்து அவள் கைகளைப் பற்றித் தூக்கி விட்டான்.

காபின் லைட் வெளிச்சத்தில் டிரைவர் பார்வதியை முழுமையாகப் பார்த்தான்.

பதினெட்டு வயதின் பருவப் பூரிப்பு. கிராமத்துக் கட்டுடம்பு. கல்லூரி நாகரிகம். பருவம் ஏற்றிய மெருகில் 'பளிச்'சென்றிருந்தாள். அவனுக்கு இருபத்து மூன்று வயதிருக்கும். மீசை சரியாய்க்கூடக் கறுக்கவில்லை. காலேஜ் மாணவன் போல் ஸ்டெப் கட்டிங், பெல் பாண்ட்.

லாரி கிளம்பியது. டிரைவர் இருவரையும் திரும்பித் திரும்பிப் பார்த்தான்.

''உங்களுக்கு எந்த ஊர்?'' என்று டிரைவர் கேட்டான்.

''பக்கத்துக் கிராமம்.''

''இந்தப் பொண்ணு யாரு?''

''என் ஒய்ஃப்....''

''உன் பெண்சாதியா!'' டிரைவர் ஏளனமாகச் சிரித்தான்.

குற்ற உணர்வில் குமாரும் பார்வதியும் பார்த்துக் கொண்டனர்.

''உன் பேர் என்னம்மா?''

''பார்வதி''

''உன் கழுத்தில் தாலி இருக்கா?''

டிரைவர் மீண்டும் சிரிக்க ஆரம்பித்தான். இருவரும் குறுகிப் போயவிட்டனர்.

''யார் இட்ட ஏமாத்தறே? உண்மையைச் சொல்லு. இவளைக் கள்ளத்தனமாத் தள்ளிக் கிட்டுத்தானே ஓடறே?''

''ஓடிப் போறதா நினைக்கக் கூடாது. எங்க நிலைமை அப்படி....''

''அப்படி வா வழிக்கு. ம்... விவரமாச் சொல்லு.''

''எங்க கிராமத்தில் பார்வதியின் அப்பா பெரிய பணக்காரர். பெரிய வீடு. தோட்டம். வயல், வண்டி மாடு எல்லாம் நிறைஞ்சவர். ஆனா எங்க அப்பா நாலு இடத்தில் கூலி வேலை செஞ்சு பிழைக்கிறவர்....

''சின்ன வயசிலிருந்தே பார்வதிக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பேன். நான் காலேஜில் படிக்கிறபோது அவள் ஹைஸ்கூலில் படித்தாள். எங்க ரெண்டு பேருக்கும் பிரிக்க முடியாத சிநேகம் வளர்ந்திடுச்சு. அவள் படிப்புக்கு நான் உதவியா இருக்கிறதா நெனைச்சுத்தான் அவர் அப்பா நாங்க பழகறதை அனுமதிச்சிருக்கார். ஊர்ல எங்கரெண்டு பேருக்கும் கல்யாணமாகப் போகுதுன்னு பேசிக்கிட்டாங்க. இந்தச் செய்தி அவர் காதில் விழுந்தபோது ''சேச்சே! ஒரு கூலிக்காரன் மகனுக்கு என் பெண்ணைக் கொடுக்கிறதாவது'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டாராம். உடனடியா அவர் கல்யாணத்தை நடத்தத் தீர்மானிச்சுட் டார். படிக்காத ஒரு பணக்காரப் பையனை ஏற்பாடு செஞ்சுட்டார். பார்வதி மனம் பொறுக்காமல் என்னிடம் வந்து அழுதாள். அவரை எதுக்க எங்களால் முடியாது. அத னால்தான்....''

லாரியின் இரைச்சலுக்கிடையில் டிரைவர் கவனமாகக் கேட்டான்.

''டவுனுக்குப் போய் என்ன செய்யப் போறீங்க?''

''மேரேஜ் பண்ணிக்கப் போறோம்.''

''உங்களைத் தடுக்க இனி யார் இருக்கா? கல்யாணத்துக்குப் பிறகு? ''

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது?

''ஏன் முழிக்கறே? நீயும் சாப்பிடணும். அந்தப் பொண்ணுக்கும் சாப்பாடு போட ணும். அதுக்கு என்ன வழி?''

''ஏதாவது வேலை தேட ணும்.''

''வேலை கிடைக் கலேன்னா?''



அவன் இணைந்தான்.

''நான் சொல்லட்டுமா? அவள் நகைக ளெல்லாம் காலி பண்ணுவே. அது தீர்ந்ததும் அவளை நடுத் தெருவில் விட்டுட்டு ஓடுவே. அல்லது அவளைக் கெட்ட வழியில் ஈடுபடுத்துவே.''

''அப்படி ஒரு நாளும் நடக்காது. அதை விட நாங்கள் இருவரும் சாவில் நிம்மதியைக் காண்போம்.''

''ஓடிப் போன பெண்கள் என்ன கதிக்கு ஆளானாங்கன்னு நான் ஆயிரம் பார்த்திருக்கேன்.''

டிரைவரின் பேச்சுக்களில் சூதும் நக்கலும் தொனிப்பதை அவனால் உணர முடிந்தது.

ஒரு பாலத்தருகில் லாரி பெரிய உறுமலை வெளிப்படுத்திக் கொண்டு நின்றது. டிரைவர் இஞ்சினை ஆஃப் பண்ணிவிட்டுப் பீடி ஒன்றை எடுத்துப் பற்றவைத்தான். புகையை வளையமாக விட்டவாறே யோசனையிலிருந்தான். பீடி கரைந்ததும் தேய்த்து அணைத்துத் தூர எறிந்துவிட்டு காபின் லைட்டைப் போட்டான்.

பார்வதி மிரள மிரள விழித்துக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துக்கொண்டே பானட்டைத் திறந்தான்.

''ரேடியேட்டர் ஹீட்டாயிட்டுது! தண்ணி வேணுமே....'' என்றவாறு வாளியை எடுத்தான்.

''தம்பி அந்த ஓடையில் இறங்கி ஒரு வாளி தண்ணிகொண்டா!''

''நானு?''

''வேற யார் இருக்கா?''

குமார் தயக்கத்துடன் பார்வதியைப் பார்த்தான். அவள் பேந்தப் பேந்த விழித்தாள்.

''சீக்கிரம் தண்ணி கொண்டு வாப்பா. நேரமாகுது.'' டிரைவர் அவசரப்படுத்தினான்.

''ஒரே இருட்டா இருக்கு.''

''வாலிபப் பையன். இருட்டுக்குப் பயப்படறையே!''

''நீங்க கொண்டு வாங்களேன்.''

டிரைவர் கோபத்துடன் அவனை நோக்கினான்.

''டேய்! முதலில் லாரியிலிருந்து கீழே இறங்கு.''

''என்னங்க டேன்னு மரியாதை இல்லாம கூப்பிடறீங்க?''

---

கண்ணன்: குடை மிளகாய் ரொம்ப சின்னதா இருக்கே?

கடைக்காரர்: இது 'லேடீஸ் குடை' மிளகாய்ங்க!

- லலிதா செல்லப்பா



''மரியாதையாடா வேணும்? இந்தா...''

குமாரின் கன்னத்தில் ஓங்கி அறைந்தான். பார்வதி நடுநடுங்கிப் போனாள்.

''கீழே இறங்கடா.''

மீண்டும் உதை. பட்பட்டென்று விழுந்த அடிகளைத் தாள முடியாமல் குமார் லாரியிலிருந்து குதித்தான். அவனைத் தொடர்ந்து டிரைவர் குதித்தான்.

''ராஸ்கல்! மீசையே முளைக்கல்ல. உனக்கு ஒரு பெண் கேடா? ஊரைப் பார்த்து ஓடடா! இல்லேன்னு கல்லை விட்டு எறிஞ்சே உன்னைக் கொன்னுடுவேன்.''

ஒரு கல்லை எடுத்துக் குமார் மீது விட்டெறிந்தான். கரண்டையில் பட்டுச் சுரீரென்று வலித்தது. மறு கல்லை அவன் எடுப்பதைக் கண்டதும் குமார் ஓட்டம் பிடித்தான். திரும்பியே பார்க்காமல் ஓடிப்போய்விட்டான்.

பார்வதி லாரியிலிருந்து இறங்க முயன்றாள்.

''ஏய்! எங்கே இறங்கறே. உனக்கும் அடி வேணுமா?''

அவன் போட்ட அதட்டலில் பார்வதி நடுங்கிப் போனாள். டிரைவர் லாரியில் ஏறி ஸ்டார்ட் பண்ணினான்.

''பேசாம நான் சொன்னபடி கேக்கணும். ஏதாவது தகராறு பண்ணினியோ கொன்னு குழி தோண்டிப் புதைச்சுட்டுப் போயிடுவேன்.''

பார்வதிக்கு அழுகையாக வந்தது. அடக்க முயன்றாள். முடியவில்லை. அவளையும் மீறிக் கேவ ஆரம்பித்தாள்.

''அழுகறயா? நல்லா அழு. தைரியமா படி தாண்டி வந்தவ எதுக்கும் தயாரா இருக்கணும். இனி பத்தினியா இருக்கணும்னு முடியுமா?''

ஆத்திரத்தோடு ஆக்ஸிலேட்டரை அழுத்தினான். கண் மண் தெரியாமல் அதி வேகமாய்ப் பறந்தது லாரி. டிரைவர் என்ன பாடு படுத்தப் போகிறானோ! நினைக்கவே அவளுக்கு அச்சமாக இருந்தது.

மூன்று மைல் சென்றிருக்கும். சாலையின் குறுக்கே பெரிய மரம். டிரைவர் பதறிப் போய்ப் பிரேக்கை அழுத்தமாக மிதித்தான். வேகமாய் வந்த லாரி குப்புற விழுவது போல் குலுங்கி நின்றது. இருட்டிலிருந்து இரண்டு பேர் வெளிப்பட்டு லாரியை மறித்தனர். ஒருவன் நல்ல வாட்ட சாட்டம். அடர்த்தியான மீசை. அவன் கையில் கூர்மையாகத் தீட்டப்பட்ட அரிவாள். மற்றவன் பரட்டைத் தலை. நல்ல வளர்த்தி. நீண்ட தடிக் கம்பு; வைத்திருந்தான்.

டிரைவர் அவசரம் அவசரமாக ''பார்வதி! கொள்ளைக்காரங்க மாதிரி தெரியுது. உன்னைக் கண்டா விடமாட்டானுக. நீ தப்பணும்னு சீட்டுக்கு அடியில் போர்வை இருக்கு. எடுத்து மூடிக்கிட்டு ஒளிஞ்சிக்க'' என்றான்.

''ஏ டிரைவர், கீழே இறங்கடா!''

தடிக்கம்பால் லாரியில் ஓங்கித் தட்டினான்.

டிரைவர் கீழே இறங்கியதும் இருவரும் அவனுக்கு முன்னும் பின்னுமாக நின்று கொண்டனர்.

''லாரியில் என்னடா இருக்கு?'' டிரைவரின் வயிற்றில் அரிவாளைப் பதித்துக் கொண்டு கேட்டான் தடியன்.

''ஒண்ணுமே கிடையாது. லோடு இறக்கி விட்டு வெத்து லாரி திரும்பி வருது.''

பரட்டைத் தலையன் லாரியைச் சுற்றி நோட்டமிட்டு வந்தான்.

''அண்ணே, லாரியில் ஒண்ணுமில்லே.''

''லோடு இறக்கின பணம் வாங்கி இருப்பியே.''

தடியன் பலாத்காரமாக டிரைவரின் மடியை இழுத்தான். கத்தை கத்தையாகக் கரன்சி நோட்டுக்கள். அப்படியே அள்ளிக் கொண்டான்.

''அது என் பணமில்லே. முதலாளி கிட்டே சேர்க்க வேண்டிய பணம். தயவு செய்யுங்க.''

மண்டையில் ஓங்கி ஓர் அடி. டிரைவரின் பொறி கலங்கியது!

''லாரியில் பணம் வச்சிருப்பான். தேடிப் பாருடா.''

''இருக்கிற பணத்தை எடுத்துக்கிட்டீங்க. லாரியில் வேறே பணம் கிடையாது'' என்று டிரைவர் மன்றாடினான்.

பரட்டைத் தலையன் காபினைத் திறந்து டார்ச் அடித்துப் பார்த்தான்.

போர்வைக்குள் பந்து போல் சுருண்டு படுத்துக் கிடந்தாள் பார்வதி. கை விட்டுப் போர்வையைத் துழாவினான். பார்வதி நெளிந்தாள். போர்வையை ஓர் இழுப்பு. மறு கணம்....

''அண்ணே இங்கே வந்து பாருங்க!''

அரிவாள்காரன் ஓடி வந்தான்.

மருண்டு நின்ற பார்வதியின் பருவக் கவர்ச்சியும் எடுப்பான அழகையும் கண்டு கொத்திப் பிடுங்குவது போல் பார்த்துக் கொண்டே நின்றான்.

''ஏய்! கீழே இறங்கடி!''

டிரைவர் ஓடிவந்து குறுக்கே நின்றான்.

''முடியாது. அவள் இறங்க மாட்டாள். பார்வதி நீ இறங்காதே.''

''டேய்! விலகி நில்.'' அரிவாள்காரன் உறுமினான்.

''பணத்தைப் பறிச்சுக்கிட்டீங்க, அதோடு போங்க. இந்தப் பெண்ணை மட்டும் நான் விட மாட்டேன். வீண் வம்பு பண்ணாதீங்க.''

''டேய்! மறுபடியும் சொல்றேன். விலகிடு. இல்லேன்னா ஒரே வெட்டு. தலை துண்டா விழும்.''

''வெட்டிப் பாரு.''

அரிவாள்காரன் மீசை சினத்தால் துடித்தது. அரிவாளை ஓங்கினான். டிரைவர் சாமர்த்தியமாக விலகினான். ஓங்கிய வேகத்தில் அரிவாள் லாரிச் சட்டத்தில் வசமாய்ப் பதிந்து சிக்கிக் கொண்டது.

டிரைவரின் பொறுமை எல்லை மீறிவிட்டது. அவன்மீது பாய்ந்தான். அரிவாள்காரன் டிரைவரை எட்டி உதைத்தான். அதே நேரத்தில் பரட்டைத் தலையன் டிரைவரின் மண்டையை நோக்கிக் கம்பை ஓங்கினான். அடியைத் தடுக்க விரைந்த டிரைவரின் கைகளில் கம்பு வசமாய்ச் சிக்கிக்கொண்டது. கம்பைப் பலமாகப் பற்றி ஓர் உலுக்கு உலுக்கினான். பரட்டைத் தலையன் பிடி நழுவி அப்பால் போய் விழுந்தான். மறு விநாடி கம்பு டிரைவரின் கையில் மின் விசிறியாய்ச் சுழல ஆரம்பித்தது.



டிரைவர் சிலம்ப வித்தை தெரிந்தவன் என்பது கம்பு சுழன்ற விதம் காட்டியது. அந்த இருவரால் டிரைவரின் கம்பு வீச்சுக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. இருவருக்கும் காலிலும் முட்டியிலும் சரியான அடி. இனி நின்றால் அகப்பட்டதை இழக்க நேரிடும் என்று இருவரும் ஓட்டம் பிடித்தனர்.

வெற்றி வீரனாக டிரைவர் லாரியில் ஏறி ஸ்டார்ட் செய்தான்.

''மடப் பயல்கள்! பணத்தைப் பிடுங்கினான். போகட்டும் என்று விட்டேன். பெண்ணைப் பிடுங்கினால் கொடுப்பேனா? என் கண் எதிரே உன்னைக் கொண்டு போனா நான் மீசை முளைச்ச ஆம்பிளையாய்ப் பிறந்து என்ன பிரயோசனம்? அப்படிக் கையாலாகாதவனா நான்?''

டிரைவர் ஆங்காரமாகச் சொல்லிக் கொண்டான்.

மலைத்து நின்ற பார்வதி டிரைவரை நெருங்கி வந்தாள். அவன் நெற்றியில் ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. தன் பேக்கிலிருந்து ஒரு துண்டை எடுத்து ரத்தத்தைத் துடைக்க ஆரம்பித்தாள்.

டிரைவர் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தான்.

''உனக்கும் தைரியம் வந்துட்டது போலிருக்கே!''

''கொஞ்ச நேரத்துக்கு முந்தி வரை நீங்கள் என்ன செய்யப் போறீங்களோன்னு பயந்து தான் இருந்தேன். இப்பொழுது அந்தப் பயம் போய்விட்டது.''

''அப்படின்னா நான் உன்னே ஒண்ணும் செய்ய மாட்டேன்னு நினைக்கிறியா?''

''நீங்க என்ன செய்தாலும் நான் தயாரான நிலைக்கு வந்துவிட்டேன்.''

''ஏன் அப்படி?''

''நான் யார்? உங்களுக்குப் பெண்சாதியா, அல்லது காதலியா? சான்சா கிடைச்சவ தானே? கொள்ளைக்காரங்க அரிவாள் ஆயுதங்களோட உங்களைத் தாக்கினபோது நீங்க ஏன் என்னைக் காப்பாத்தணும்?''

''அது என் மானப் பிரச்னை. என் பணத்தைப் பறிச்சபோது அவர்களை எதிர்க்க என்னால் முடிஞ்சதா? என் வசத்தில் இருக்கிற பெண்ணைப் பறிக்கும்போது என் மானத்தைப் பிடுங்குவது போல் இருந்தது. உயிர் பெரிதா, மானம் பெரிதா?''

''என் வரையில் மானம் எங்கே இருக்கணுமோ அங்கே இல்லாமல் போய்விட்டது. பெற்று வளர்த்தவங்களையும் அவங்க பணத்தையும் துச்சமா மதிச்சு ஒருவனை நம்பி ஓடி வந்தேன். அவன் ஆபத்துச் சமயம் என்னை அம்போன்னு விட்டுட்டுத் தான் மட்டும் பிழைத்தால் போதும் என்று ஓடிவிட்டான்.''

''அது போகட்டும். இப்போது நான் சொல்றதை நீ கேட்பியா?''

''இப்போது நான் உங்கள் கையில். நீங்க சொல்வதைக் கேட்க வேண்டியவள்தான்.''

''எனக்குப் பெண்சாதி இருக்கா. உன் வயசுல மகள் இருக்கா. உன்னை வேறவீட்ல குடி வைப்பேன். நீ எனக்குத் தாலிகட்டாத பொஞ்சாதியா வாழணும். சம்மதமா?''

''சரி.''

''நீ பணக்கார வீட்டில் பிறந்தவ. படிச்சிருக்கே. ஒரு டிரைவரோட கேவலமான இந்த வாழ்க்கையை உன்னால் ஏத்துக்க முடியுமா?''

''அது என் தலையெழுத்து.''

''இந்தத் தலையெழுத்து ஏன் வந்தது? நீ படி தாண்டி ஓடிவந்தே. நீ நம்பியவன் ஓடிவிட்டான். இனி நீ வீட்டுக்குத் திரும்பிப் போக முடியாது. எப்படி வாழ்ந்தாலும் சரின்னு உன்னைத் தாழ்த்திக்கிட்டே.''

''நீங்க சொல்றது அத்தனையும் உண்மை. என் வாழ்க்கை சீரழிந்தாச்சு. நான் எப்படி வாழ்ந்தால் என்ன?''

அவன் லாரியை நிறுத்தி ரிவர்ஸில் ஓடித்துத் திருப்பினான். வந்த வழி நோக்கித் திரும்பியது லாரி.

''லாரியை ஏன் திருப்பிட்டீங்க?'' என்று பார்வதி கேட்டாள்.

''ஓடுகாலியாய் வந்த நீ எப்படி எல்லாம் சீரழியணும் என்கிறதைப் புரிய வைக்கத் தான் உன்னை இவ்வளவு தூரம் கொண்டு வந்தேன். இந்த ராத்திரி அனுபவத்திலேயே எல்லாம் புரிஞ்சுக்கிட்டே. உன்னைப் பார்த்தா என் மகள் போல் இருக்கு. உன்னைச் சீரழிக்க என் மனம் ஒப்புமா? உன் தாய் தகப்பன் கிட்ட உன்னை ஒப்படைக்கப் போறேன்.''

''ஐயோ! வேண்டாம். ஓடிப் போன என்னை என் அப்பா கொலையே செஞ்சுடுவார்.''

''உன்னை அந்தக் குமார் கூடக் கண்டால் தான் உன் அப்பாவுக்குக் கோபம் வரும். நீ விரக்தியோட என் லாரி முன் விழுந்ததாயும் நான் உன்னைக் காப்பாத்தித் திரும்ப வீட்டுக்குக் கூட்டி வந்ததாயும் வசமாய்ச் சொல்கிறேன். உன் அப்பா சமாதானமாயிடுவார்.''

முரட்டுத் தோற்றம் கொண்ட அந்த டிரைவரின் இதயம் புனிதமான ஒரு கோவிலாகத் தோன்றியது பார்வதிக்கு. ஒரு தெய்வமாக நினைத்து அவன் காலில் விழுந்து வணங்கினாள்.

---

# உல்லாசப் பறவைகள்

ஒரு குரூரமான காட்சியைக் கண்டதனாலும், ஒரு காதல் தோல்வியினாலும் மனநலம் இழந்த பணக்கார வாலிபன் ரவி தன் தந்தையினால் சிகிச்சைக்கு அயல் நாட்டுக்கு அனுப்பப்படுகிறான். திரைக் கதையே அயல் நாடுகளில் நடப்பதனால், படத்தில் அயல் நாட்டு அற்புதங்களைச் சேர்ப்பதில் சிரமமில்லை. ரைன் நதியில் நடக்கும் படகுப் போட்டிகள், வாயு வேக மனோ வேகமாய்ப் பறக்கும் கார்கள் மோதி, நொறுங்கி, கவிழ்ந்து...அப்பப்பா! ஒரே 'த்ரில்லிங்' காட்சிகள்!



கமலஹாசன் மன நலம் இழந்தவனாக மனத்தில் பதியும் வண்ணம் சிரத்தையாக நடித்திருக்கிறார். மன நலச் சிகிச்சைக்கு உறு துணையாக இருக்கும் தமிழ் நாட்டுப் பெண் நிர்மலாவாக வரும் ரதி ஓர் உல்லாசப் பறவை! அவரைத் திரையில் பார்க்கும்போது கிளுகிளுப்பு உண்டாகிறது.

ரவியின் உள்ளத்தில் முதலில் இடம் பெற்ற ஏழைப் பெண் தன் மாமனின் கொடுமையால் தீ வைக்கப்பட்ட குடிசையில் இறந்து விடுகிறாள். இது சிறிது நேரமே வந்தாலும், தீபா மனத்தில் நன்கு பதிந்து விடுகிறார்.



இளையராஜாவின் பின்னணி இசை பரவசமூட்டுகிறது.

கருணிராஜன், வெண்ணிற ஆடை மூர்த்தியின் காமெடிக் காட்சிகள் சரியான ரம்பம்! அதுவும் மூர்த்தி காணும் மேல் நாட்டு நங்கையின் நிர்வாணத் தோற்றக் கனவுக் காட்சி திரைக் கதையுடன் எவ்விதத் தொடர்பும் இல்லாதது! அத்துடன் இந்த நல்ல படத்துக்குத் தேவையற்ற அசிங்கமும் கூட!

உல்லாசப் பறவை — போயிங் போல ஜிவ்வென்று பறக்கிறது.

—காந்தன்

# டாக்டர் பேசுகிறேன்! மூடி மறைக்காதீர்!

மனிதனுக்கு வியாதி என்பது உடல் உறுப்புக்கள் பாதிப்பது, ஜுரம், வலி என்பது மட்டுமல்ல. மனோநிலை போன்றவைகளும் மனிதனை வியாதி பிடித்தமாதிரி செய்து விடுகிறது. அவன் பழக்கங்கள், உணர்வின் பிரதிபலிப்புகள் எல்லாவற்றிலும் இந்தக் குறை பிரதிபலிக்கும். மனிதனுக்குக் குறை இருப்பது சாதாரணம். இருக்கும் குறையைச் சரிப்படுத்திக்கொள்வதுதான் கெட்டிக்காரத் தனம்.

எவ்வளவோ ஆண்கள், நன்றாகப் படித்துப் பட்டம் பெற்றவர்கள், பெரும் பதவியில் இருப்பவர்கள், தங்களுக்கு இருக்கும் குறைகளை விவரமாக டாக்டரிடம் சொல்லி



வழி தேடிக் கொள்வதேயில்லை. இன்றைய மருத்துவ முன்னேற்ற நிலையில் எந்தக் குறையையும் தீர்க்க வழியுண்டு. உங்கள் குறையைப் பற்றி ஒருமுறை டாக்டரிடம் ஆலோசனை செய்வதில் நஷ்டம் ஒன்றுமில்லை. கண்டிப்பாக லாபம் உண்டு.

சிலர் மனோதத்துவ ரீதியாகத் தங்களைப் பற்றித் தவறாக முடிவு செய்துகொண்டு விடுகிறார்கள். மனைவிக்குக் குறை என்றால் பகிரங்கமாக அவளை அழைத்து வந்து டாக்டரின் பரிசோதனைக்கு உட்படுத்த வேண்டும் எனச் சொல்லும் ஆண், தனக்குக் குறை என்றால் மனைவி அறியக்கூட விடுவதில்லை. இந்தச் சாமர்த்தியமான மூடுமந்திர நிலை அவனோடு அவன் மனைவிக்கும் ஒரு வருத்தமான சூழ்நிலையை ஏற்படுத்தி விடுகிறது.

உதாரணத்துக்கு ஒன்று சொல்கிறேன். எங்கள் மருத்துவ மனைக்கு ஒரு பெண்மணி வந்தாள். என் டாக்டர் மனைவியைப் பார்க்க வந்திருந்தாள். ஏதோ 'செக்கப்பு'க்காக வந்திருக்கிறாள் என நான் நினைத்தேன். அவள் ஒரு நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவள். ''இவள் உடம்புக்கு என்ன?'' என்று நான் விசாரித்தேன்.

''இவளுக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை. இவளுக்குத் திருமணமாகி மூன்று வருடங்கள் ஆகிறதாம். இவள் கணவர் இன்னும் இவளை மனைவியாகவே ஏற்கவில்லையாம். மற்றபடி தம்பதிக்கு எல்லா வசதிகளும் இருக்கின்றனவாம். இந்த மாதிரி நடப்பதன் காரணம் புரியவில்லை'' என்றாள் என் மனைவி.

இது என் மனத்துக்கு மிகவும் வருத்தத்தைக் கொடுத்தது. நான் வலிய ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு அவள் கணவரைச் சந்தித்தேன். நீண்ட நேரப் பேச்சுக்குப் பிறகு, அவர் திருமணத்துக்கு முன் மிக உல்லாசமாக வாழ்ந்தவர் என்றும் அதனால் இப்பொழுது நல்ல கணவராக இருக்க முடியாது என நினைத்துக் கொண்டிருப்பதாகவும் அந்தப் பலவீனம் அவளுக்குத் தெரியக் கூடாது என்பதால் ஒதுங்கிவிடுவதாகவும் தெரிய வந்தது.

அவர் பயத்தைப் புரிந்து கொண்டதும் பரிதாபப்பட்டேன். ''பின் ஏன் மணந்து கொண்டீர்கள்?'' என்றேன்.

''என் பெற்றோர், சுற்றத்தார் வற்புறுத்தலினால்தான். என்ன செய்வது?'' என்றார்.

பிறகு அவருடைய நம்பிக்கையைப் பெற்று அவரை முழுவதும் பரிசோதித்தேன். சில மருந்துகளைக் கொடுத்து அவரைத் தன்னம்பிக்கை கொள்ளச் செய்தேன். இவ்வளவுக்கும் பிறகு அவருக்கு எல்லோரையும் போல் வாழ முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. பிறகு மகிழ்ச்சியாக வாழ்ந்தார். இன்று குழந்தையும் உண்டு. வைத்தியர் தலையீடு இல்லாமல் இருந்திருந்தால் எத்தகைய துன்பச் சுமையாக அவர்கள் வாழ்வு இருந்திருக்கும்! அவர் மனைவிக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம்! தங்களுக்கு இருக்கும் குறையை வைத்தியரிடம் கலந்தாலோசித்துத் தீர்த்துக் கொள்வது மிக மிக முக்கியம். மூடி மறைத்து வைத்துப் போலித்தனம் செய்வது தங்கள் வாழ்க்கையையே மறைமுகமாக அழித்துக் கொள்வதாகும்.

டாக்டர்: **சௌரிராஜன்**

பேட்டி: **குயிலி ராஜேஸ்வரி**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

## ...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே **தனி.**
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.




**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வேறுவித வெளுத்தது டிட்டர்ஜெண்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்

**அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-RIN.35-2012 TH

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேசியக் காசு